மென்முலையார்" நைடதம். நாட்டு. கக. (ஈ) "குரும்பைமுலை வள்ளி" திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ் ..... (உ) "குரும்பை போற்கிளர் குவிமுலைக் கௌசியோடு" உத்தரகோச. பராப்பதித்வம். ருக.

௩. "கோவைகரும்பு பந்து கொலைசூது தாளமொக்குள்" இரத்தினச். கஎ.

௪. (அ) "பேதுறலஞ்சி" அகம். ௪: சக; (ஆ) "பாவை பேதுற" சீவக. கஙௌ௪; (இ) "பேதுறவு மொழிந்தனள்" (ஈ) "பெரும்பே துற்றதும்" சீலப். கஉ: ௫க, கங: ௬௬; (உ) "பெரும்பேதுற்று விளியும்" பெருங். (உ) ௨௦ ௨அ.

௫. (அ) "வாய்வாளா நின்றான், செறிநகை" பரி. ௨௦: ௪௬ - எ; (ஆ) "வாய்வா ளேனிற்ப" கலி. ௬௫: கரு.

௬. (அ) "நீயுந்தவறிலை ........ தவறுடையான்" என்பது சொல்லுவான் குறிப்பினாற் பொருளறிய வந்தமைக்கும் (நன். பெயரியல். சூ. கஉ. மயிலை) (ஆ) "நீயுந்தவறிலை .......தவறிலர்" என்பது இணையும் பாலும்விளங்கவில்லாதசொற்களுள் நீயென்பது குறிப்பாற்பெண்பாலுணராநிற்றற்கும் (தொல். பெயரி. சூ. ௩௧. ௩௪; சூ. ௩எ. 'இன்ன பெயரே' தெய்.) மேற்கோள். (இ) "நீயுந் தவறிலை நின்கை யிதுதந்த,

(பிரதிபேதம்) *வடிவு வரைந்து. † அறியாயோ ஆங்கசை பேதுற்றாய். ‡ யாதொன்று மவராதிறந்தீவாய,

44J.

௩௪௬ **கலித்தொகை ருகூ.**

(க)நிறையழி கொல்யானை நீர்க்குவிட் டாங்குப்
(உ)பறையறைந்தல்லது செல்லற்க வென்ற
விறையே தவறுடை யான்

எ-து: "நீ மயக்கமுற்றாய்போலே பிறருடைய வருத்தத்தை அறியாயாய்க் கேட்டார்க்கு"யாதொன்றுஞ் சொல்லாயாய்க் கழிந்துபோகின்றவளே! இப் பொழுது யான் கூறுகின்றதனைக் கேள்; நீயும் குற்றமுடையையல்லை; நின்னை இற்புறத்தே புறப்படவிட்ட நம்முடைய சுற்றத்தாரும் குற்றமுடையரல்லர்; குற்றமுடையான் யாவனென்னில்,(௩)நிறையழிந்தகொல்கின்ற(௪)யானையை நீர்க்குவிட்டாற் பறைசாற்றிச செல்லுமாறுபோல, பறைசாற்றிச் செல்வ

---

பூவெழிலுண்க ணவளுந் தவறிலள், வேனிற் புனலன்ன நுந்தையை நோவார் யார், மேனின்று மெள்ளி யிதுவிவன் கைத்தந்தா, டான் யாரோ வென்று வினவிய நோய்ப்பாலேன், யானே தவறுடையேன்" கலி. அச: ௩௬ - ௪௧. (ஈ) "வந்தோன் கொடியனு மல்லன் றந்த, நீதவ றுடையையு மல்லை நின்வயி, ஞை வரும்படர் செய்த, யானே தோழி தவறுடை யேனே" அகம். எ௨: ௧௧-௨௨.

௧. "நிறையழி யானை நெடுங்கூ விளியும்" மணி. எ: ௬எ.

௨. (அ) "வெரூஉப் பறை நுவலும் பரூஉப் பெருந் தடக்கை, வெருவரு செலவின் வெகுளி வேழம்" பொருந. ௧எ௧ - ௨. (ஆ) "தெண்கிணை முன்னர்க் களிற்றி னியலி" புறம்: ௭௧: ௩. (இ) "பாகும் பறையும் பருந்தின்பந்தரு,மா தூல மாக்களுமலவுற்றுவிளிப்ப" மணி. ௪:௪௧-௨. (ஈ)"பறை நிறை கொல்யானை" (உ)"அறைபறை யானை" முத்தொள். (ஊ) "பறைவன் களிற்றுப்......பாஞ்சாலர்க்கு" வில்லி. சூது. ௨௨௫.

௩. யானைக்கு நிறையுடைமையாவது: "இருநிலநனைப்பவிழிதருகடாத்துக் கைம்மிகக் களித்த கவுள தாயினுஞ், செயிர்கொண் மள்ளர் செரு விடத் தல்ல, துயிர்நடுக் குறுமை" பெருங். (௧) ௩அ: ௧௧அ - ௧௨௧. யானை நிறையழிதல்: "காழோர் கையற மேலோரின்றிப், பாகின் பிள வையிற் பணைமுகந் துடைத்துக், கோவியன் வீதியுங் கொடித்தேர் வீதியும், பீடிகைத் தெருவும் பெருங்கலக்குறுத்து...............பாகும் பறையும் பருந்தின் பந்தரு, மா தூல மாக்களு மலவுற்று விளிப்ப, நீல மால்வரை நிலனொடு படர்ந்தெனக், காலவேகங் களிமயக்குற்றென"

"நீல யானை மேலோ ரின்றிக், காமர்செங்கை நீட்டிவண்டோடு, பூநாறு கடாஅஞ் செருக்கிக் கால்கிளர்ந்து, நிறையழி தோற்றமொடு தொடர" என (மணி.ச: ரு௫-சச, கக: உ௦-உக.) வருவனவற்றால் அறியலாகும்.

ச. "கையது கையோ டொருதுணி கோட்டது, மொய்யிலைவேன் மன்னர்முடித்தலை-பைய, வுயர் பொய்கை நீராட்டிச் செல்லுமே யெங் கோன், வயவெம்போர்மாறன் களிறு" தொல். புறத். சூ.கஎ.'நச்.மேற். (பிரதிபேதம்) * என்றியான் கூறுநிற்க நீ மயக்க,



லைத் பறைசாற்றுமத் செல்லரதொழிகவென்று சொல்லாத இறைவனே யன்க; எ - று.

இதனால், தலைவற்கு அசைவென்னும் அழுகை பிறந்தது.

இது புணர்த நிமித்தமாதலிற் *குறிஞ்சியுட்கோத்தார். இது தான் உயிர்கொடுத்தானாகத் தனது நன்மைகூறி அவன் † நீங்குங் கூறினான்.

இது முன் ஒரு நெடுவெண்பாட்டும் ஓர் அம்போதரங்கமும் தனிச்சொல்லும் ‡ தாழிசையும் பின்னும் ஒரு தனிசசொல்லும் வெள்ளைச்சுரிதகமும் பெற்றுவந்த கொச்சகக்கலிப்பா. (உ௦)

(௫எ.)வேயெனத் திரண்டதோள் வெறிகமழ் வணரைம்பான்
மாவென்ற மடநோக்கின் மயிலியற் றளர்பொல்கி
யாய்சிலம் பரியார்ப்ப வவிரொளி யிழையிமைப்பக்
கொடியென மின்னென வணங்கென யாதொன்றுந்
தெரிகல்லா விடையின்கட் கண்கவர் பொருங்கோட
வளமைசா லுயர்சிறப்பி னுந்தைதொல் வியனக
ரிளமையா னெறிபந்தோ டிகத்தந்தாய் கேளினி ;
அ பூந்தண்டார்ப் புலர்சாந்திற் றென்னவ னுயர்கூடற்
றேம்பாய வவிழ்நீலத் தலர்வென்ற வமருண்க
ணேந்துகோட் டெழில்யானை யொன்னுதார்க்கவன்வேலிற்
சேர்ந்துநீ யிணையையா லொத்ததோ சின்மொழி;

கஉ பொழிபெயல் வண்மையா னசோகந்தண் காவினுட்
கழிகவி னிளமாவின் றளிரன்ன யதன்றலைப்
பணையமை பாய்மான்றே ரவன்செற்றார் நிறம்பாய்ந்த
கணையினு நோய்செய்தல் கடப்பன்றோ கனங்குழாய்;

*கரு வகையமை தண்டாரான் கோடுயர் பொருப்பின்மேற்
றகையிண ரிளவேங்கை மலரன்ன சுணங்கினாய்
†தவவிமிருகடாஅத் தவன்யானை மருப்பினுங்
கதவவாற் றக்கதோ காழ்கொண்ட விளமுலை;

எனவாங்கு;

உக இனையன கூற விறைஞ்சுபு நிலநோக்கி
நினையுபு நெடிதொன்று நினைப்பாள்போன் மற்றாங்கே
துணையமை தோழியர்க் கமர்த்த கண்ணணண்
மனையாங்குப் பெயர்ந்தாளென் னறிவகப் படுத்தே.

(பிரதிபேதம்)* குறிஞ்சி யுடனே, † இங்கு கூறினன், ‡ தாழிசையும் வெள்ளைச்



**இதுவும் அது.**

**இதன் பொருள்.**

(க)வேயெனத் திரண்டதோள் வெறிகமழ் வணரைம்பான்
(உ)*மாவென்ற மடநோக்கின் †மயிலியற் றளர்பொல்கி
(ங)யாய்சிலம் பரியார்ப்ப வவிரொளி யிழையிமைப்பக்
கொடியென மின்னென ‡வணங்கென யாதொன் றுந்
தெரிகல்லா (ச)விடையின்கட் (ரு)கண்||கவர் பொருங்கோட
÷வளமைசா லுயர்சிறப்பி னுந்தைதொல் வியனக
ரிளமையா னெறிபந்தோ டிகத்தந்தாய் கேளினி

எ-து:(க)மூங்கிலென்னும்படி திரண்டதோளினையும்மணம்நா றுகின் றகடை குழன்ற ஐம்பாலினையும் மானேக்கினை வென்ற மடப்பத்தையுடையநோக்கினை

யும் மயில்போன்ற சாயலினையுமுடையையாய், அழகிய சிலம்பு உள்ளிமெணி ஆரவாரிப்ப,விளங்குகின்ற ஒளியினையுடையகலங்கள்விளங்க,.(எ)நடக்கத்தாற்

---

க. இச்செய்யுள் உள்ளப்புணர்ச்சியுற்ற தலைமகன் வரைதல்வேணடிப் பாங்கற்குரைத்தற்கு மேற்கோள்; தொல். களவு. சூ. எ. இளம்.

உ. (அ)'மாவென்ற மடநோக்கின்' என்பது வினைபயன் மெய்யுருவென்ற வற்றுக்கு உரியனவென்று பாகுபடுத்துணர்த்தப்பட்ட சொற்களன்றி மரபினான்வரு முவமைச்சொல்லுக்கு மேற்கோள். தொல். உவமை. சூ. கஎ. இளம். (ஆ) "மானோக்கின்" (இ) "மாதர்கொண் மானோக்கின் மடந்தை" (ஈ) "மானோக்கி" கலி. ௩௦ ௪௦, ௬௧: ௪, அஎ: ௧௧, (உ) "மானேர் நோக்கின் வளைக்கை யாய்சசியர்" தக்கயாகப். சூ. ௧௧. மேற்கோள். (ஊ) "மானேர் நோக்கம்" சிலப். எ: ௪௭. (எ) "மானினோக்கி" சீவக. ௩௫௧.

௩. "ஆய்சிலம் பெழுந்தார்ப்ப வஞ்சில வியலுகின்" கலி. ௫௧: எ.

௪. "இடைவனப்பும்" ஏலாதி. எ௫.

௫. (அ)"கண்கவர் காரிகை" இறை. சூ. எ. மேற்கோள். 'பையுண்மாலைப்' (ஆ)"கண்கவர் வனப்பின்" (இ)"கண்ணுங் கவர்ந்திட வனப்புவாய்ந்த, வொண்டொடி" நைடத. அன்னத்தைததூது. ௧உ, போர்புரி. ௫.

௬. (அ) "வேயிற் றிரண்டதோள் வேற்கண்ணாய" பழ. ௩௪.(ஆ) "வேயே திரண்மென்றோள்" (இ) "வேயழத் திரண்டமென்றோள்" சீவக. ௬௫௨. உ௧௨௩.(ஈ) "வேயெனத் திரண்டதோள் விளங்கு மேனியாள்" சூளா. கல்யாண. உ௨௦.

எ. "கொடியென நுடங்கி வேலெனக் கலந்து... .. .. .. .....மின்னெனப் பிறங்குநுண் ணுசுப்பை" காஞ்சிப். மாசாத்தன். ௧௫.

(பிரதிபேதம் * மான்வென்ற, † மயிலியலாற்றலா, ‡ அணங்கென வியாதொன்றும், || கவர் பெருங்கோட, கவர்பெழுந தோட ÷ வளமையாலுப்ர்,

காடியென்ன (௧) விளக்கத்தான் மின்னென்னக் கட்புலனாகாமையின் வருத்தமென்ன யாதொன்றுந்தெரியாத இடையிடத்தே கண்கள்விரும்பிச் சேர ஓட, நின்னுடைய இளமைப்பருவத்தாலே செல்வம் அமைந்த உயர்ந்த நிலைமையினையுடைய (௨) நுந்தையுடைய பழமையுடைத்தாகிய அகற்சியை

யுடைய மனையினின்றும் அடிக்கின்ற பந்தோடே தளர்ந்து ஓதுங்கிப்புறப் படுதலைச் செய்தவளே! இப்பொழுது யான் கூறுகின்றதனைக் கேள்; எ - று

அ (ஹ)*பூந்தண்டார்ப் புலர்சாந்திற் றென்னவ னுயர்(௬)கூடற்
றேம்பாய வவிழ்நீலத் தலர்வென்ற வமருண்க

ணோங்குகோட் டெழில்யானை யொன்னுதார்க் கவன்(௫)வேலிற்
சேந்துநீ யினையையா லொத்ததோ (௯)சின்மொழி

எ - து சிலவான மொழியினையுடையாய! பூவினையுடைய குளிர்ந்த மாலையினையும் புலர்ந்த சந்தனத்தினையுமுடைய பாண்டியனது உயர்ந்தமதுரையிடத்துத் தேன்பரக்கும்படி அவிழ்ந்த நீலத்தினது அலரைவென்ற போரையுடைய கண்கள் தலையாதின கோட்டையும் அழகினையுமுடைய யானையினையுடைய பகைவர்க்கு அப்பாண்டியன் வேல் மனம் வருத்துமாறுபோலச்

௧. "மின்னென நுடங்கு மருங்குலும்" (தொல். கள. சூ. ௧௧. மேற்கோள் 'கண்ணெண்ண') என மின், நுடக்கத்தானும் உவமைகூறப்படுமாயினும் கொடிக்கு நுடக்கங் கூறப்பட்டமையின் விளக்கமட்டுமே கூறினர்.

௨. நுந்தையென்பது முறைப்பெயர் இடும்ம் நகரம் பற்றுக்கோடும் ஆக வரும் மொழிமுதற் குற்றியலுகரச்சொல்லென்பதும இதன் முதலை இதழ்குவியாது குறையக் கூறல்வேண்டுமென்பதும் இதழ் குவித்துக் குறுகாதபடி முற்றக் கூறியவழியும பொருள் வேறுபடாதென்பதும் தொல். மொழி. சூ. ௩௪ - ரு. இள ௩௪; உரைகளால் அறியலாகும்.

௩. "பூந்தடைடார் .. . . . சின்மொழி" என்பது முன்னோ கூறிய காமகுறிப்பினும் செந்துறைப் பாட்டின்கணவரும் வண்ணப்பகுதி வரைதலில்லையென்பதற்கு, மேற்கோள். தொல். புறத்.சூ. உ௨. 'வழங்கியன்' இளம்.

௪. இந்நூற்பக்கம் உ௬௫ க - ஆம் குறிப்புப்பார்க்க.

௫. (அ) "அமுரர்ண் முன்பிற் றன்னைய ரேந்திய, வடிவே லெஃகிற் சிவந்த வுண்கண" புறம். ௩௱௦: அ - ௯. (ஆ) "அடையார்த் துரந்த வருந்திற லயிலவன், படைத்தலை பெயர்த்த கறையெஃகம் போலக், கடைசிவந் தனவே கருங்கயன் மழைக்கண்" நாற். சூ. ௧௪௭. மேற்கோள்; 'வான்போழ்' (இ) "புணைடலை வேலினுங் கண்சிவப் பார" (ஈ) "வென்றி வேல்போற்சி வந்து" தஞ்சை. ௬௩,'௬அ.

௬. "சின்மொழி" இந்நூற்பக்கம், ௧௬௬ ௧௨ஆம் குறிப்புப்பார்க்க, (பிரதிபேதம்) ' பூந்தண்டார் புலா.



சிவந்து' வருத்தஞ்செய்து நீ இத்தன்மையையா யிரா நின்றாய், இது நீ இளமைக்குத் தக்கதோ ; எ - று.

கண்சேர்தினையையென்றது, சினைவினை முதலொடுமுடிந்தது

௧௨ *பொழி(௩)பெயல் வண்மையா னசோகந்தண் காவினுட
கழிகவி னிளமாவின் றளிரன்ன யதன்றலைப்
பணிமை பாய்மான்றே ரவன்செற்றார் நிறம்பாய்ந்த
கணையினு நோய்செய்தல் கடப்பன்றோ கனங்குழாய்

எ - து: பொன்னாற்செய்த குழையினையுடையாய்! பொழிகின்ற பெயல் போலுங் கொடையினையுடைய பாண்டியனது அசோகமரத்தினையுடைய குளிர்ந்த பொழிலிடத்துநின்ற மிக்க அழகினையுடைய இளைய (௨)மாவினது தளிரை யொத்த நிறத்தினையுடையையாய் அங்ஙனம் வருத்துதற்கு மேலே பந்தியிலே நிற்றலமைந்த பாய்ந்துசெல்லுங் குதிரைபூண்ட தேரையுடைய பாண்டியனாற் செறப்பட்டவர்கள் மருமத்தே தைத்த அம்பினுங்காட்டில் நோவைச்செய்தல் உலகிற் கொடுமைகளின் மிக்ககொடுமையன்றோ? எ - று.

கச வகையமை தண்டாரான் கோடியர்(௩)†பொருப்பின்மேற்
றகைமிணா ரிய(௪)வேங்கை மலரன்ன சுணங்கினாய்

---

க. (அ) "பெயன்மழைத் தடக்கைப், .. .. .....நல்லியக் கோடனை" சிறுபாண். கஉ௪ - ௬. (ஆ) "மழைசுரந் தன்ன வீகை நல்கி" மலை படு. ௫௮௦. (இ) "அவன், வண்மைபோல் வானம் பொழிந்தநீர்" பரி. உஉ: எ - அ. (ஈ) "வானத்தன்ன வண்மையும்" (உ) "மாரியன்ன வண் மைத், தேர்வேளாயை"(ஊ)"வரையா மாபின் மாரிபோல... .பேகன், கொடைமடம் படுதலல்லது" (எ)"மாரி யீகை மறப்போர் மலையனும்" (ஏ) "மாரியன்ன வண்மையிற் சொரிந்து" புறம். ௫௫: கடு, கஙங:

௬-எ, கசஉ: ங - ௫, கடுஅ எ, ஙகல. கசு. (ஐ) "மாரியி னேற்பார்க் கவைநல்கி" (ஒ) "மாரிமழை வள்ளல்" சீவக. ஙசு௫, ௫௦௦. (ஓ) "கார்கிகர் வண்கை" நன். சிறப்பு. என்பவைகள் ஈண்டறிதற்பாலன.

உ. (அ) "மாவி, னவிர்தளிர் புரைய மேனியர்" முருகு. கசங - ச, (ஆ) "தேமா மேனி" சிறுபாண். ளகசு. (இ)"மாந்தளிரே மாமேனி" சீவக. சு௫உ. (ஈ) மாவி னிளந்தளி ரன்ன நயத்தகு மேனியும்" (உ) "மாந் தளிர் மேனியும்"(ஊ)"மாந்தளிர் மேனி"நைடத.அன்னத்தைத். உங.

ங. பொருப்பென்பது பொதியின் மலையின் பெயராதலை இந்நூற்பக்கம் கக௫: க - ஆம் குறிப்பால் உணர்க.

௪. வேங்கைமலர் சுணங்குக்கு உவமையாதல், "வேங்கைவீ முற்றெழில் கொண்ட சுணங்கணி பூண்கம்" (கலி. ௬௪: உசு - எ.) என்பதனாலும் அதன்குறிப்பாலும் அறியலாகும்.

(பிரதிபேதம்) * மொழிபெயல் † பரப்பின.

தவலி *மிகுகடா அத் தவன்(௩)யானை மருப்பினுங்
(௨)கதவவாற் றக்கதோ காழ்கொண்ட விளமுலை

எ-து: (௩)வகுப்பமைந்தகுளிர்ந்ததாரினையுடையபாண்டியனது(௪)சிகரீங்
ளுயர்ந்த (௫)பொதியின்மலையிடத்து அழகினையுடையகொந்துக்களையுடைய
இளைய வேங்கைப்பூவையொத்த சுணங்கினையுடையாய்! முத்துவடத்தைத்
தன்னிடத்தேகொண்ட நின்னுடைய இளையமுலைகள் இப்பருவத்திலும் அப்
பாண்டியனுடைய மிகுதியையுடைய வலியினையும் மிகுகின்ற கடாத்தினையு
முடையயானையினுடையகொம்புகளிலுங்கோபத்தினையுடைய வாயிராநின்றன,
இக்கொடுமை இப்பருவத்திற்குத் தக்கதோ ? எ - று.

எனவாங்கு

எ-து: என்று; எ-று. ஆங்கு அசை.

௨௧ இனையன கூற விறைஞ்சுபு †நிலநோக்கி

‡நினையுபு நெடிதொன்று நினைப்பாள்போன் மற்றாங்கே
துணையமை தோழியர்க் காரத்த கண்ணள்
மனைபாங்குப் பெயர்ந்தா(௬)ளென் னறிவகப் படுத்தே

---

௧. (அ) "கொடுங்கே ழிரும்புற நடுங்கக் குத்திப், புலிவிளை யாடிய புலவு நாறு வேழத்தின், றலைமருப் பேய்ப்பக் கடைமணி சிவந்தநின், கண்ணே கதவ வல்ல" நற். ௩௯: ௪-எ. (ஆ) "கொடியனவாங்கொலை யானையின் கோடு" தஞ்சை. ௬௮.

௨. (அ) கதத்தினையுடைய வென்னும் பொருளில் 'கதவ' என அஃறிணைப் பன்மைவினைக்குறிப்பு வகர வீற்றான்வந்ததற்கு, "கதவவாற் றக்கதோ காழ்கொண்டவிளமுலை" என்பது மேற்கோள்; தொல்: வினை. ௫. ௨௪. கல். ௫௪. (ஆ) "தொடலை தைஇய மடவரன் மகளே, கண்ணினுங் கதவநின்முலையே" ஐங். ௩௬௧. (இ) "கண்ணே கதவவல்ல" நற். ௩௯:எ.

௩. (அ) "வகைத்தார் மார்பன்" பெருங். (௪) ௪: அ. (ஆ) "முறிமிடை படலைமாலை" - 'வகைமாலை' சீவக. ௧அ௮௧. (இ) "பூவார் முறிமிடை படலைமாலை" சூளா. துறவு. ௨௩ என்பவைகள் இங்கே ஒப்புநோக்கற் பாலன.

௪. (அ) "எற்றரு நெடுஞ்சிமைப், புகலரும் பொதியில்" அகம். ௩௨௨: கந - ௪. (ஆ) "ஓங்குயர் மலையத்து" மணி. ௧ ௩. (இ) "கோடியே ரகத்து" தமிழ்நெறி. மேற்கோள்.

௫. (அ) "பொதியில், வேங்கையுங் காந்தளு நாறி" குறுந். ௮௪ (ஆ) "அடுக்கத்த, விடர்வரை யெரிவேங்கை யிணர்" கலி. ௪௫:௧௩-எ.

௬. "என்பால, வென்னைவிட்டிகத்தர விறந்தீவாய்" கலி. ௫௧: ௮ - ௯.

(பிரதிபேதம்) *தமழ்கடா அத்தவன். † நிலநோக்கி ‡ நினைகுபு, நினைவள.



எ-து: *இத்தன்மையனவற்றை யான் நெடிதொன் றநினையாநின் று கூ அதற்கு ஒன் று கூறாதே கவிழ்ந்து நிலத்தைப்பார்த்துப் பின்னை அவ்விடத் தோழியரை நினைப்பாள்போலே துணையாயமைந்த தோழியர்க்குப்பொருந்தி கண்ணையுடையளாய் என் அறிவைத் தன்னிடத்தே அகப்படுத்திக்கொண் †தன்மனையிடத்தே மீண்டுபோனாள்; எ - று.

இஃது எமஞ்சாலாவிடும்பையெய்திக் கூறினது.

நெடிதொன் று நினையாநின்றென்றது தான் சிறிதுநாட் சென்று வரைந்துகோடலை நினையாநின்றென்றதாகக்கொள்க. நினைப்பாள்போலெ றதனால் அவன் கூற்றினையும் இதுவுமொன்றெனச் சிறிதுகொண்டமையு தோன்றிற்று.

இதனால், தலைவற்கு அசைவென்னும் உவகை பிறந்தது.

‡இஃது எழுடித்தரவும் நான்கடித்தாழிசையுந் தனிச்சொல்லும்நான்கடிச் சுரிதகமும்பெற்ற ஒத்தாழிசைக்கலிப்பா. (௨௧)

(௫௮) வாருறு வணரைம்பால் வணங்கிறை நெடுமென்றோட் பேரெழின் மலருண்கட் பிணைபெழின் மானோக்கிற் காரெதிர் தளிர்மேனிக் கவின்பெறு சுடர்நுதற் கூரெயிற்று முகைவெண்பற் கொடிபுரையு நுசுப்பினாய் நேரிலம் பரியார்ப்ப நிரைதொடிக்கை வீசினை

யாருயிர வெளவிக்கொண் டறிந்தியா திறப்பாய்கேள்;

௭ உளனாவென் னுயிரையுண் டுயவுநோய் கைம்மிக
இளமையா னுணராதாய் நின்றவ றில்லானுங்
களைநரி னோய்செய்யுங் கவினறிந் தணிந்துதம்
வளமையாற் போத்தந்த நுமர்தவ றில்லெனபாய்;

௧௧ நடைமெலிந் தயர்வுறீஇ நாளுமென் னலியுநோய்
மடமையா னுணராதாய் நின்றவ றில்லானு
மிடைநில்லா தெய்க்குநின் னுருவறிந் தணிந்துதம்
முடைமையாற் போத்தந்த நுமர்தவ றில்லென்பாய்;

௧௫ அல்லல்கூர்ந் தழிவுற வணங்காகி யடருநோய்
சொல்லினு மறியாதாய் நின்றவ றில்லானு

மொல்லையே யுயிர்வௌவு முருவறிந் தணிந்துதஞ்
செல்வத்தாற் போத்தந்த நுமர்தவ றில்லென்பாய்;

எனவாங்கு;

---

(பிரதிபேதம்) * என்றிதனன்மையன † தன்னிடத்தே மீண்டுபோரு வெனவேமஞ்சாலா விடும்பை யெயதிக்கூறினன். செடி ‡இது எழுடி.

## இரண்டாவது குறிஞ்சி உட. ௩௫௩

ஓறுப்பினியா னொறுப்பது நுமரையான் மற்றிந்நோய்
பொறுக்கலாம் வரைத்தன்றிப் பெரிதாயிற் பொலங்குழாய்
மறுத்திவ்வூர் மன்றத்து மடலேறி
நிறுக்குவென் போல்வல்யா னீபடு பழியே.

இதுவும் அது.

இதன் பொருள்.

(க) வாருறு (உ)வணரைம்பால் வணங்கிறை நெடுமென்றோட்
பேரெழின் மலருண்கட் (ங)பிணையெழின் மானோக்கிற்
(ச)*காரெதிர் தளிர்மேனிக் கவின்பெறு †சுடர்நுதற்
கூரெயிற்று முகைவெண்பற் கொடிபுரையு நுசுப்பினாய்
நேர்சிலம் பரியார்ப்ப ‡நிரைதொடிக்கை வீசினை
யாருயிர் வௌவிக்கொண் டறிந்தீயா திறப்பாய்கேள்

எ-து: கோதுதலுற்றகடைகுழன்ற(ரு)ஐம்பாலினையும்வளைந்தஇறையினை யுடைய நெடிய மெல்லிய தோளினையும் பெரிய அழகினையுடைய ||மலர் போலுங் கண்ணினையும் மான்பிணையினது அழகினையுடைய வெருவின நோக்குப்போலும் நோக்கினையும் மழையைப்பெற்ற தளிர்போலும் நிறத்தினை யும் அழகுபெறுகின்ற பிறைபோன்ற நுதலினையும் (சு) விழுந்தெழுந்த கூரிய

---

க. "வாருறு வணர்கதுப் புளரி" குறுந். அஉ.

உ. (அ) "வணரைம்பால்" கலி. ருஎ: க. (ஆ) "வணர்சுரி யைம்பாலோய்" சிலப். எ: ஙக.

ங. (அ) "பிணையெழின் மானோக்கின்" (கலி. உஎ: ங) என்பதும் அதன் குறிப்பும் (ஆ) "மான்பிணையன்ன மகிழ்மடநோக்கே" (புறம். ஙருச: க0.) என்பதும் ஈண்டறிதற்பாலன.

ச. "தளிபொழி தளிரன்ன வெழின்மேனி" கலி. கங: கக.

ரு. (அ) "நெய்யிடை நீவி மணியொளி விட்டன்ன, வைவகை பாராட்டி ஞய்மற்றெங் கூந்தற், செய்வினை பாராட் டினையோ வைய" (ஆ) "இளையவ ரைம்பால் போல்" கலி. உஉ: கஉ-ச, உக: சு.

சு. (அ) "போழுறு பகுவாயிற் பொலிதரு மெயிறேம், வீழுறுநகையாலும் விரிதரு தியினாலும், தாழுறு மதிதன்னைத் தாரகை நிரைசூழ, ஆழுற வமர்செவ்வா னொத்ததவ் வழியன்றே" கந்த. முதனாட்பானு. கசஅ.

பிரதிபேதம்) * காரெதி ரொளிர்மேனி, † பிறைநுதற், ‡ நிரைதொடி வீசினை, || மலர் போலும் அழகிய மான்போலும் கண்ணையும் மேகமறைத்தலாற் சுடரெதிர் தோன்று மிக்கிரதரைப்போலும் அழகிய நுதலினையும் வெள்ளிய பல்லினையுமுடைய.

வயிற்றினையும் விழுந்தெழாத முகைபோலும் வெள்ளிய பல்லினையுமுடை கொடியையொக்கும் இடையினையுடையாய்! காலுக்குப்பொருந்தினசிலம்பு உள்ளிமெணி ஆரவாரிப்ப நிரைத்த தொடியையுடைய கையை வீசி யாய்ப் பெறுதற்கரிய என்னுயிரைக்கொண்டு இளமையாற் கைக்கொண்டதை அறியாதே போகின்றவளே! யான் கூறுகின்றதனைக் கேள்; எ - று.

எ (க)உளனுவென் னுயிரையுண் (உ)டியவுநோய் கைம்மிக
விளமையா னுணராதாய் நின்றவ றில்லானுங்
களைநரி னோய்செய்யுங் கவினறிந் தணிந்துதம்
வளமையாற் போத்தந்த நுமர்தவ றில்லென்பாய்

எ-து: வருத்தத்தினையுடைய(௩)காமநோய்கைம்மிகும்படியாகயான்சிறிது உயிருடனே இருக்கும்படி என்னுயிரை வாங்கிக்கொண்டு நின் இளமைப பருவத்தாலே அறியாமற் போகின்றவளே! நின்னிடத்துத் தப்பில்லையாயினும்

(௪)நின்னையொழியப் போக்குவார் பிறர் இல்லாத நோயைசசெய்யும் அழகை யறிந்துவைத்தும் அதன்மேலே (௫) ஒப்பித்துத் தஞ் செல்வச்செருக்காலே புறப்படவிட்ட நும்முடைய சுற்றத்தாரைத் தவறுடையரல்லரென்று கூறலா மாகிற் கூறு; †அஃது அரிது;' எ - று.

கக நடைமெலிந் தயர்வுறீஇ நாளுமென் னலியுநோய்
மடமையா னுணராதாய் நின்றவ றில்லானு

(ஆ) "முளையெயி றிரம்பா விளமைப் பருவத்து" தமிழ்நெறி. மேற்கோள். (இ)"முன்ப லரும்பிய பானுறு செவ்வாய்ப், புன்றலை மகாஅர்" ஆசிரியமாலை.

க. (அ) "உண்ணின்ற நோய்மிக வுயிரெஞ்சு துயர்செய்தல், பெண்ணன்று" கலி. ௬௦: ௬ - எ. (ஆ) "இலனென்று தீயவை செய்யற்க" (குறள்.உ0௫) என்புழி இலன்என்பதில் அன் விகுதி தனித்தன்மையில்

வர் கதென்பதற்கு, "உளனுவென் னுயிரையுண்டு" என்பதை மேற்கோள் காட்டினர்; பரிமேலழகர்.

உ. (அ) "உயவுநோய்க் குயிர்ப்பாகி" (ஆ) "உயவுநோய்க் குய்யுமாறுரைத்துசசெல்" கலி. ௩௰. உஉ, ககங: ங. (இ) "உயாவே யுயங்கல்" தொல். உரி. சூ. எக.

ங. "காமங் கைம்மிகிற் றாங்குத லெளிதோ"

ச. (அ) "நின்முகங் காண்பெறி னல்லது கொன்னே, மருந்து பிறிதி யாது மில்லேல்" கலி. ௬௦: உ௦ - உக. (ஆ) "பிணிக்கு மருந்து பிறம னணியிழை, தன்னோய்க்குத் தானே மருந்து" குறள். ககாஉ.

ரு. ஒப்பித்தல் - அலங்கரித்தல்.

(பிரதிபேதம்) * கைமிக, † அது அரிது (தாழிசை மூன்றிறுரையிலும்).

## இரண்டாவது குறிஞ்சி உஉ. ரு௫

(௩)மிடையில்லா நெய்க்குநின் னுருவறிந் தணிந்துதம்
முடைமையாற் போத்தந்த நமர்தவ றில்லென்பாய்!

எ - து: (உ)அறிவு நிறை ஓர்ப்புக் கடைப்பிடி என்னும் ஒழுக்கந் தேய்ந்து தலை எனக்கு உறுத்தி நாடோறும் என்னை நலிதற்குக் காரணமான நீ ய்த நோயை நினது மடப்பத்தாலே அறியாமற் போகின்றவளே! நின் னிடத்துத் தப்பில்லையாயினும் சிற்கமாட்டாதே இளைக்கும் இடையையுடைய நின் வடிவை அறிந்துவைத்தும அதன்மேலே ஒப்பித்துத் தஞ்செல்வச்செருக்காலே புறப்படவிட்ட நம்முடையசுற்றத்தாரைத் தவறுடையரல்லரென்று கூறலாமாகிற் கூறு; அஃது அரிது; எ - று.

கறி அல்லல்கூர்ந் தழிவுற வணங்காகி யடரும்நோய்
சொல்லினறியாதாய் நின்றவ றில்லாறு
பொலங்கலம்பெ யுயிர்வெளவு முருவறிந் தணிந்துதஞ்
செல்வத்தாற் போத்தந்த நமர்தவ றில்லென்பாய்

எ - து நெஞ்சழிந்து வருத்தமிகுங் கெடும்படி வருத்தமாகி மேன்மேலும் அடர்ந்துவருகின்ற காமநோயைக் குறிப்பான்† அறிதலன்றிச் சொல்லிக் காட்டினும் அறியாதவளே! நின்னிடத்துத் தப்பில்லையாயினும் ஒழுக உயிரைவாங்காது விரைய உயிரைவாங்கும் நின் வடிவை அறிந்துவைத்தும் அதற்குமேலே ஒப்பித்துவைத்துத் தஞ் செல்வச்செருக்காலே புறப்படவிட்ட நும்முடைய சுற்றத்தாரைத் தவறுடையரல்லரென்று கூறலாமாயிற் கூறு; அஃது அரிது; எ - று.

ஆயினும், ஆனுமெனக் குறைந்து‡ நின்றது. அழிபுகவென்றும் பாடம்.

மாலைநங்கு, அசை.

ஒறுப்பின்யா னொறுப்பது நுமரையான் மற்றிந்நோய்
(ங)பொறுக்கலா வரைத்தன்றிப் பெரிதாயிற்(ச) பொலங்குழாய்

---

க. "பிணையேர்மடநோக்கு நாணுமுடையாட், கணியெவனோ வேதிலதந்து" (குறள். ௧0௮௯.) என்பதற்கு, பரிமேல் எழுதிய உரையும், 'இவட்குப் பாரமாதலும் எனக்கு அணங்காதலுங் கருதாமையின், அணிந்தார் அறிவிலரென்பதாம்' என்னும்விசேடவுரையும் இங்கே அறிதற்பாலன.

உ. அறிவு முதலியவற்றின் பொருள், இந்நூலிறுதியிலுள்ள அகராதியில் விளக்கப்பெறும்.

ங. (அ) "பொறைநில்லா நோயோடு" (ஆ) "உரிதென் வரைத்தன்றி யொள்ளிழை தந்த, பரிசழி பைதனோய்" கலி. ங: ௬; ௧ங௮: ௨௦ - ௨௧.

ச. "பொன்னென் கிளவி" (தொல். புள்ளி. சூ. ௬௧) என்னும் சூத்திரமும் அதற்கு இளம். நச. எழுதியுள்ள உரையும் நோக்குக.

(பிரதிபேதம்) * நின்னையறிந்து, † அறிதலின்றி ‡ நின்றது எனவாகவு மாக்கலா ஒறுப்பின.



புறத்திவ்வூர் மன்றத்து மடலேறி
நிறக்குவென் போல்வல்யா னீபடு பழியே

எ - து: யான் ஒறுத்துக்கூறில் ஒறுப்பது புறத்துப்போதவிட்ட

முடைய சுற்றத்தாரை; நின்னையன்று; பின்னை இக்காமநோய் பொறுக்கலாகா அளவையுமீட்டன்றி மிகுமாயிற் பொன்னாற்செய்த குழையினையுடையா யான் இங்ஙனம் வருந்துகின்றநிலைமையைப் போக்கி இவ்வூரின் மன்றத்திலே கண்ணே மடலேயேறி நீ எய்துவதொரு பழியை யான் உனக்கு நிறுத்துவேன் போலே இராநின்றேன், நீ அதனை *அறி; எ - று.

இது சொல்லெதிர்பெறாஅன் சொல்லியின்புற்றது. (க)

அவளுந் தமருந் தீங்குசெய்தாராக அவளொடு தீமைகைப் புணர்த்தும் தான் ஏதஞ்செய்யாது உயிர்கொடுத்தானைத் தன்னொடு நன்மையைப் புணர்த்தும் கூறியவாறு காண்க.

அவன் இங்ஙனம் மிகுதி கூறுவான், மடலேறுவேன் போல்வலென ஐயுற்றுக்கூறினன்.

இதனால், தலைவற்கு அசைவென்னும் உவகை பிறந்தது.

†இஃது ஆறடித்தரவும் நான்கடித்தாழிசையும் பொருள்பெறாத தனிச சொல்லும் நான்கடிச்சுரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக்கலி. (உஉ)

(ருசஅ.) தளைநெகிழ் பிணிநிவந்த பாசடைத் தாமரை
முளைநிமிர்ந் தவைபோலு முத்துக்கோ லவிர்தொடி
யடுக்கலா றலர்காந்த ளுண்ணேர்தண் ணேருருவிற்
றொடுப்பெனப் புரையுநின் றிரண்டேர ரரிமுன்கைச்
ரு சுடர்விரி வினைவாய்ந்த தூதையும் பாவையும்
விளையாட வரிப்பெய்த வழகமை புனைவினை
யாய்சிலம் பெழூஉந்தார்ப்ப வஞ்சில வியலுநின்
பின்னுவிட் டிருளிய வைம்பால்கண் டென்பால
வென்னைவிட் டிகத்தர விறந்தீவாய் கேளினி;

க. தொல். அகத். சூ. ௫௦. இச்சூத்திர வுரையில் இப்பாட்டை மேற்கோள் காட்டி, தான் உயிர்கொடுத்தானாகத் தனது நன்மை கூறி, அவளது தீங்கெல்லாங் கூறுவான் மடலேறுவேன் போலுமென்று ஐயுற்றுக் கூறியவாறு காண்க. அவளைச்சொல்லுதலே தனக்கு இன்பமாதலிற் "சொல்லியின்புறல்"என்றார். என்பர். நச். இ-வி. உரைகாரரும் இ-வி. ௪அக-ஆம் சூத்திரவுரையில் இதனை மேற்கோள்காட்டி இறுதி வாக்கியத்தை எழுதினர்.

(பிரதிபேதம்) * அறியெனச் சொல்லெதிர் பெறான் சொல்லி யின்புற்றான் அவனும். † இது ஒத்தாழிசைக்கலி,

## இரண்டாவது குறிஞ்சி உங. நருள

மருளியான் மருளுற விவனுற்ற தெவனென்னு
மருளிலை யிவட்கென வயலார்நிற் பழிக்குங்கால்
வையெயிற் றவர்நாப்பண் வகையணிப் பொலிந்துநீ
தையினீ ராடிய தவந்தலைப் படுவாயோ;

கச உருளிழா யொளிவாட விவனுண்ணோ யாதென்னு
மருளிலை யிவட்கென வயலார்நிற் பழிக்குங்காற்
பொய்தல மகளையாய்ப் பிறர்மனைப் பாடிநீ
யெய்திய பலர்க்கீத்த பயம்பயக் கிற்பதோ;

கஅ ஆய்தொடி யைதுயிர்த் திவனுண்ணோ யாதென்னு
நோயிலை யிவட்கென நொதுமலர் பழிக்குங்காற்
சிறுமுத்த னைப்பேணிச் சிறுசோறு மடுத்துநீ
நறுநுத லவரொடு நக்கதுநன் கியைவதோ;

எனவாங்கு;

உங. அனையவை யுளையவும் யானினக் குரைத்ததை
யினையநீ செய்ததூஉ வாயாயிற் சேயிழாய்
செய்ததன் பயம்பற்று விடாது

நயம்பற்று விடணில்லே நசைஇயோர் திறத்தே

இஃது இரந்துதுறையுற்றுப் பின்னின்ற தலைவன் ஆற்றறாய்த் தலைவியைநோக்கி இங்ஙனம் வருத்துவையாயின் நீ செய் தவம் இன்றமெனக் கூறியது.

இதன் பொருள்.

தளைநெகிழ் பிணிநிவந்த பாசடைத் (க)தாமரை
முளை*நிமிர்ந் தவைபோலு முத்துக்கோ லவிர்தொடி
(உ)யடுக்கநா றலர்காந்த †ணுண்ணேர் தண் ணேருருவிற்
(௩)றுடுப்பெனப் புரையுநின் றிரண்டமே ரரிமுன்கைச்

---

க. "தாமரை, முளைநிவந் தவைபோலு முத்துக்கோ லவிர்தொடி." என்பதை, குறிப்பு மொழியுள் விகாரத்திற்கு மேற்கோள் காட்டி, கோலமென்பது கோலெனக் கடைக்குறைந்து வந்ததென்பர். மயிலைநாதர்; நன். பெயர். சூ. கஉ.

உ. (அ) "சிலம்புடன் கமழு மலங்குகுலேக் காந்தள்" குறுந். உஙக. (ஆ) "நறுந்தண் சிலம்பி னறுகுலேக் காந்தள்" ஐங். உஉச.

௩. (அ) "துடுப்பெனப் ... ........விளையாட" என்பது, ஒரு வேற்றுமையுருபு தொடர்ந்தடுத்துவந்த சொற்கள் ஒரு முடிக்குஞ் சொல்லால் (பிரதிபேதம் * நிவந்தவை. † தண்ணே ரேருருவிற்.



ரு சுடர்விரி * விணைவாய்ந்த (க) தூதையும் பாவையும்
விளையாட வரிப்பெய்த வழகமை புனைவினை
(உ)யாய்†சிலம் பெழுந்தார்ப்ப வஞ்சில வியலுநின்
பின்னுவிட் டிருளிய வைம்பால்கண் டென்பால
வென்னைவிட் டிகத்தர விறந்தீவாய் கேளினி

எ - து: ‡முறுக்கு அவிழ்ந்ததும் அரும்புகள் நீருக்குமேலேஓங்கின பசிய இலையினையுடையதுமான தாமரையினது வளையம் வளர்ந்தவையிற்றை யொக்கும் (ந.) முத்தை அழுத்திச்செய்த திரட்சியையுடைய விளங்குகின்ற தொடியினையுடைய, அடுக்கமெல்லாம் நாறுகின்ற கூரிய அழகினையுடைத் தாகிய அலர்களையுடைய காந்தளினது குளிர்ந்த (ச)எழுச்சியையுடைத்தாகிய வடிவினையுடைய துடுப்பென்று கூறும்படியாக ஒக்கும் திரண்ட தம்மில் இணையொத்த மெல்லிய முன்கையினாலே(ரு)இங்குலிகம் எழுதின ஒளிவிரிந்த

முடிந்ததற்கு மேற்; தொல். வேற் - மயங். சூ. கக. நச. (ஆ)"காந்தளந் துடுப்பிற் கவிகுலை யன்ன, செறிதொடி முன்கை" பட். கரு௩ - ச. (இ)"காந்த ணறுங்குலை யன்ன, நலம்பெறு கையினென் கண்புதைத் தோயே" ஐங். உக௩. (ஈ) "கைபோற் பூத்த கமழ்குலைக் காந்தள்" பரி. கக: எசு.(உ)"பனிதுடுப் பெடுத்த வலம்புகுகுலைக் காந்த ளணிமலா நறுந்தாது தூதும் தும்பி, கையாடு வட்டிற் றோன்று, மையாடு சென்னிய மலைகிழ வோனே" அகம். கoஅ: கரு - கஅ. (ஊ)"காம்பமை சிலம்பிற கடிநாட் காந்தட், பூந்துடுப் பன்ன முன்கையின்" (எ) "காந்தட், பூந்துடுப் பன்ன புனைவளை முன்கை" பெருங். (உ) கரு: எ௩ - ச; (ச) கக: எஅ - கூ. (ஏ) "கைவிரிந்தன காந்தளும்" சூளா. நாடு. கக.

க. "மண்ணை யாக்கிய சோதீந் திட மகிழ்ந்தார்" மறைசையந். உரு.

உ. "இன்மணிச் சிலம்பிற் சின்மொழி மையமாற், பின்னொடு செழீஇய தடவர" கலி. கஉரு: கசு-எ

௩. (அ) "கைக்குவான்முத்தின் சரிவளைபெய்து" திருவாநூர்த்திருவிசைப் பா. க. (ஆ)"துணிகதிர் முத்திற் செய்த வங்கதந் தோளிற்பூட்டி"(இ) "நிலவுமிழ் மணியிற் செய்த வங்கத நெடுந்தோள் சாத்தி" காஞ்சி. திருமண. ௩சு, சஅ.

ச. "எரால்து எழுச்சி; அது வெழுகின்ற நிலைமையென நிகழ்காலமே குறித்துநிற்கும்" என்பது (தொல். பொருளி. சூ. ரு௩. நச.) ஈண்டும் நோக்கற் பாலது.

ரு. இங்குலிகம் - சாதிலிங்கம்.

(பிரக்ஷேபகம்) [*] வரியாயதத, வரியாய. † சிலம்பரி யாயபப வருசெலவியலும், சிலம்பரி பெருநதாரப்ப. ‡ தளைநெகிழ தாமரை முறுக்கவிழநத தாமரை, பிணிவிடந்த பாசடைததாமரை - அரும்புகளை ஈருககுமேலே யோகவின பசிய விலைவியீன யுடைய தாமரை; தாமரைவளையம் வளாகத.



தாழில்களையுடையவாகிய வாய்களையுடைய மரத்தாற்செய்த சிறுபானை ஈரலும் பாவையாலும் விளையாடுதற்கு, உள்ளிடுமணியிட்ட அழகமைந்தமைந்த தாழில்களையுடைய அழகிய சிலம்புகள் மிக ஆரவாரிப்ப அழகினையுடைய அடியிடாநடக்கும் நின்னுடைய இளமை நீங்குதலாற் பின்னுதல் விட்டு ருண்ட ஐம்பாலைக்கண்டு என்னிடத்துண்டாகிய(க) அறிவுமுதலியனஎன்னை டுப் போம்படியாகப் போகின்றவளே! யான் கூறுகின்றதனை இப்பொழுது கள்; எ - று.

தளைநெகிழ்தாமரை, பிணிவிடந்தபாசடைத்தாமரையென்க.

மருளி(உ)யான் மருளுற விவனுற்ற தெவனென்னு
மருளிலை யிவட்கென வயலார்நிற் பழிக்குங்கால்
வையெயிற் றவர்நாப்பண் வகையணிப் பொலிந்துநீ
(ந)தையினீ ராடிய தவந்தலைப் படுவாயோ

எ - து: யான் மயக்கமுறுகையினாலே அதுகண்டு தானும மருண்டு இவனுற்ற நோய் யாதுதானென்று கேட்கும் அருள் இவட்கு இல்லை யென்று யான் ‡கூற, அதுகேட்டு அயலார் நின்னைப் பழிக்குமளவிற் கூரிய

---

க. "மனையாவகுப் பெயர்ந்தாளென் னறிவகப் படுத்தே" கலி. நஎ: உச.

உ. "ஆருயிர் யாமென்றான் றிடருறு மாவகத்த், கோருயிர் போல வுருகி யுயக் கொள்ள, நேரின துமுடி யாதெனி னெஞ்சகத், நீர முடைமை யருளி னியல்பே" சூளா. துறவு. கஎ௦.

ங. நீராடலும் தவமென்பது (அ) "நீஇ ராடல்...... ... ...எற்ற தவத்தி னியல்பென மொழிப" (தொல். புறத்திணையியல். சூ.உ௦. மேற்.) (ஆ) "தவாதி போகு மருமறைத்தாபதர்" கலி சு: கக. (இ) "சங்கையி னதி

கண முற்று மாடிய தவத்தின் பேறும்" திருவிளை. தலவிசேடப். கக. என்பவர்மூல் அறியலாகும். (௬) "தையினீராடுதல் மகளிர்க்கு உரிய தென்பது, "இன்று இவ்வூரெல்லாந் தைந்நீராடும்" என்பது உயர்திணைக்கண் தொழிலிற் பிரிந்த ஆணொழி மிகுசொல்லுக்கும் (தொல். கிளவி. சூ. ௫௦. இள;) உயர்திணை ஆணொழி வினைக்கும் (நன் பொது. சூ. க. மயிலை) (௭) "இவ்வூர்மககளெல்லாம் தைந்நீராடினர்" என்பது பெண்பாலென வினையினற்பொருள்விளங்கிற்றென்பதற்கும் (தொல். கிளவி. சூ. ௫௧. 'அவற்றுள் வினைவேறு' தெய்.) (௮) "இன்று இச்சேரியார் தைந்நீராவேர்" என்பது உயர்திணையிடத்துத் தொழிலிற் றோன்றும் ஆணொழி மிகுசொல்லுக்கும் (நேமி. சொல். கக. உரை) (எ) "மருவூரார் தைநீராடினர்" என்பது வினைச்சொல் உயர்திணை ஆணையொழித்து வந்ததற்கும் (நன். பெயரி. சூ. கஉ. மயிலை.) மேற்கோள்களாகக் காட்டப்பெற்றிருத்தலால் விளங்கும். அவருள்ளும்

(பிரதிபேதம்)* சிலம்புமிக் காரவாரிப்ப, சிலம்புகள் மிககாரவாரிப்ப, † கேள். மருளியான், ‡ கூறுவது கேட்டவயலார,



எயிற்றினையுடைய இளையமகளிர்க்கு நடுவே வகுப்புடைய கோலத்தாலே பொலிவுபெற்று நீ தைத்திங்களில் நீராடிய(க) நோன்பின் பயனைப் பெறுவையோ? பெருய்காண்; எ - று.

கச உருளிழா யொளிவாட விவனுண்ணோ யாதென்று
மருளிலை யிவட்கென வயலார்நிற் பழிக்குங்கால்
பொய்தல மகளையாய்ப் பிறர்மனைப் பாடிநீ
யெய்திய *பலர்க்கீத்த பயற்பபக் கிற்பதோ

ஏ - து: தலையிற் கிடந்து அசையும் (உ) தலைப்பாளையையுடையவனே! ஒளிகெடும்படி இவன்மனத்தில் உண்டாகிய நோய் யாதென்று கேட்கும் அருள் இவட்கு இல்லையென்று யான்†கூற அது கேட்டு அயலார் நின்னைப்

பழிக்குமளவில் நோன்பாகிய விளையாட்டினையுடைய மகளாந்தன்மையை யுடையயாய்ப் பிறர் மனையின்கண்ணே ஐயமேற்றுப் பாடி நீ ஆண்டுப் பெற்ற வையிற்றைப் பிறர்க்குக் கொடுத்ததனாலுள்ள பயன் நினக்குப் பயன் தருவதொன்றோ ? தாராதுகாண ; எ - று.

பொய்தல, அகரஞ் செய்யுள் விகாரம்.

கஅ ஆய்தொடி யைதுயிர்த் திவனுண்ணோ யாதென்னு
நோயிலை யிவட்கென நொதுமலர் பழிக்குங்காற்
(ரு)சிறுமுத்த னைப்பேணிச் சிறுசோறு மடுத்துநீ
‡நறுநுத லவரொடு நக்கதுநன் கியைவதோ

எ-து: ஆராய்ந்திட்ட தொடியினையுடையாய்! நீதான் ஐதாக உயிர்த்து இவன்மனத்திலுண்டாகிய நோய் யாதென்று கேட்கும் நோய் இவட்கு இல்லையென்று யான் || கூற அதுகேட்டு அயலார் நின்னைப்பழிக்குமளவிற் சிறிய

---

கன்னியர்க்கே உரியதென்பதை, (ஏ) "நறவீ யைம்பான் மகளிராடுக், தைஇத் தண்கயம் போலப், பலர்படிந்து" (ஐங். அசு.) (ஐ) "தாயருகா நின்று தவத்தைந்நீ ராடுதல்" (பரி. கக. கூக.) என்பவை வலியுறுத்தும்.

க. நோன்பின் பயன், சிறந்தவனைக் கணவனாகப் பெறுதலென்ப.

உ. "நடுச்சிகை முத்துத்தாமம்" (சீவக. உஎகூக) என்பதற்கு, 'சிகைநடு விற் றலைப்பாளை' என்று இவ்வுரையாசிரியரும் "தொய்யகம்" (சிலப். கூ: க0எ.) என்பதற்கு, 'தலைப்பாளை' என்று அரும்பத வுரையாசிரிய ரும் 'பூரப்பாளை' என்று அடியார்க்கு நல்லாரும் எழுதியிருப்பவை இங்கே அறிதற்பாலன.

ரு. "குறுநிலக் கோமா னத்த, முத்தனை யன்றிப் பின்னை யாரையே முதன்மை செய்தான்" வில்லி. சூதுபோர். கசு.

(பிரதிபேதம்) * பலர்க்கீய்த்த, † கூறுவது கேட்டு அயலார், ‡ நறுநுதலவரொடு நக்கன்கு || கூறுவதுகேட்டு அயலார்.

மைனைப் பேணி வளர்த்து அவனுக்கு வேறொருத்தியுடைய (க) * பெண்ணைக் கோடற்குச் சிறுசோற்றைச் சமைத்து ஆயத்திற்கு இட்டு நீ நறிய நுதலையுடைய மகளிரோடே மகிழ்ந்த கோன்பின் பயன் நினக்கு வந்து பொருந்துமோ? பொருந்தாது †காண்; எ - று.

எனவாங்கு

எ-து: என்று; எ-று. ஆங்கு, அசை.

உரு. அனையவை (உ)யுளையவும் யானினக் குரைத்ததை

‡யினையநீ செய்தது வாயாயிற் சேயிழாய்

செய்ததன் பயம்பற்று விடாது

||நயம்பற்று விடினில்லை நசைஇயோர் திறத்தே

எ - து: ÷நீ நெஞ்சுளையவும் யான் நினக்குக்கூறியது சேயிழாய்! நின்னை நசசினோர் திறத்தே வருந்தும்படி நீ செய்த கொடுமைக்கு நீ ஓர் உதவிசெய்யாயாயின் நீ செய்த (௩)அத்தீங்கினுள்ள பயன் நின்னைப் பற்றுதல் விடாது,

---

க. இச்சொல், "பெண்மையடுத்த மகனென் கிளவி" (தொல். பெயரி. சூ. க, ௧௦) என்றும் "மகடூஉ மருங்கிற் பாறிரி கிளவி" (தொல். பெயரி. சூ. ௭௦) என்றும் ஆசிரியரால் வழங்கப்பெறுதலும் "பெண்மையடுத்த மகனென் கிளவி" (தொல். பெயரி. சூ. ௧௦) என்பதற்கு, 'புறத்துப் போய் விளையாடும் பேதைப்பருவத்துப் பெண்மகளை மாறோகத்தார் இக்காலத்தும் பெண்மகனென்று வழங்குப' என்று சேனாவரையராலும் 'கட்புலனாயதோர் அமைதித்தன்மை யடுத்து நாணுவரை யிறந்து புறத்து விளையாடும் பருவத்தாற் பால்திரிந்த பெண்மகனென்னும் பெயர்ச்சொல்' என்றும் 'பெண்மகனென்பது அத்தன்மையாரை அக்காலம் அவ்வாறே வழங்கினாராயிற்று' என்றும் இவ்வுரையாசிரியராலும் விளக்கம் எழுதப்பெற்றிருத்தலும் இங்கே அறிதற்பாலன.

உ. "உளைய வுரைத்து விடினு முறநி, கிளைகள்வாய்க் கேட்பது நன்றே" பழமொழி. உகக

௩. (அ) "உறற்பால நீக்க லுறுவர்க்கு மாகா" நாலடி. ௧௦௪. (ஆ) "வேண்டினும் வேண்டா விடினு, முறற்பால, தீண்டா விடுத லரிது" நாலடி. ௧௦௧. பழ. ௬உ. (இ) "வினைப்பகை, வீயாது பின்சென் றடும்" (௱)

"உறற்பால, வூட்டா கழியு மெனின்" (உ) "ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று, சூழினுந் தான்முந் துறும்" குறள். உ0எ, ௬எஅ, ௬அ0. (ஊ) "ஒளிப்பினு மூழ்வினை யூட்டாது கழியாது" இறை. ரு. உ. உரை. மேற்கோள். (எ)"ஊழ்வினை யுருத்துவந் தூட்டு மென்பதூஉம்" சிலப். பதி. இஎ.

(பிரதிபேதம்)* பெண் மனையை. † காண் ஆங்கசை. ‡ இனையைநீ || வையம்பற்றி ÷ என்றுநீ





அதுவேயுமன்றி(க)நீ அருளைப் பற்றுவிடுவையாயின் நினக்குஅனையவை பயம் தருதலில்லை; *எ - று.

நச்சினாரெனத் தன்னைப் பிறர்போற் கூறினன். நயம் - அருள். அனையவையென்றது, (உ)தைந்நீராடன் முதலியவற்றை.

இதனால், தலைவற்கு இழிவுபிறந்தது; தலைவிக்குச் †சூழ்ச்சிபிறந்தது.

‡இஃது ஒன்பதடித்தரவும் நான்கடித்தாழிசையும் தனிச்சொல்லும் நான்கடிச்சுரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக்கலி. (உ௬)

(௬0.) சுணங்கணி வனமுலைச் சுடர்கொண்ட நறுநுதன்
மணங்கமழ் நறுங்கோதை மாரிவீ ழிருங்கூந்த
லுணங்கெழி லொண்டித்தி நுழைநொசி மடமருங்குல்
வணங்கிறை வரிமுன்கை வரியார்ந்த வல்குலாய்;
ரு கண்ணார்ந்த நலத்தாரைக் கதுமெனக் கண்டவர்க்
குண்ணின்ற நோய்மிக வுயிரெஞ்சு துயர்செய்தல்
பெண்ணன்று புனையிழா யெனக்கூறித் தொழூஉந் தொழுதே
கண்ணுநீ ராக நடுங்கின னின்னகா
யென்செய்தான் கொல்லோ விஃதொத்தன் றன்கட்
க0 பொருகளி றன்ன தகைசாம்பி யுள்ளு
ளுருகுவான் போலு முடைந்து;
கஉ தெருவின்கண், காரண மின்றிக் கலங்குவார்க் கண்டுநீ
வாரண வாசிப் பதம்பெயர்த்த லேதில

நீநின்மேற் கொள்வ தெவன்;
கரு அலர்முலை யாயிழை நல்லாய் கதுமெனப்
பேரம ருண்கணின் றோழி யுறீஇய
வாரஞ ரெவ்வ முயிர்வாங்கு
மற்றிந்நோய் தீரு மருந்தருளா யொண்டொடீ;
கசு நின்முகங் காணு மருந்தினே னென்னுமா
னின்முகந் தான்பெறி னல்லது கொன்னே

---

க. (அ) "நல்லாற்ற ணுடி யருளாள்க பல்லாற்றாற், றேரினு மஃதே துணை" (ஆ) "அருளற்றா, ரற்றார்" குறள். உசஉ, உசஅ; (இ) "அறனு, மருளுடையான் கண்ணதேயாகும்"(ஈ)"நெகிழ்ந்த, வருளினு ளுகு மறம்" சிறுபஞ்ச. ந., நடு.

உ. "தைஇத் திங்கட் டண்கயம் படியும், பெருந்தோட் குறுமகள்" (நற். அ0: எ-அ.) எனவருதலும் காண்க.

(பிரதிபேதம்) *ஆகளினென்றான் †குட்சி, ‡ இது ஒத்தாழிசைக்கலி.

## இரண்டாவது குறிஞ்சி உச. ந.சு ந.

மருந்து பிறிதியாது மில்லேற் றிருந்திழா
யென்செய்வாங் கொல்லினி நாம்;
பொன்செய்வாம்;
ஆறு விலங்கித் தெருவின்க ணின்றொருவன்
கூறுஞ்சொல் வாயெனக் கொண்டதன் பண்புணராந்
தேற லெளிதென்பா நாம்;
ஒருவன் சாமா றெளிதென்பா மற்று;
சிறிதாங்கே, மாணுஆ ரம்ப லலரி னலர்கென
நாணு நிறையு நயப்பில் பிறப்பிலி
பூணாக நோக்கி யிமையா னயந்துநங்
கேண்மை விருப்புற் றவனை யெதிர்நின்று

நாணடப் பெயர்த்த நயவர வின்றே.

இது தலைமகற்குத் துறைநேர்ந்த தோழி தலைமகனோடு உறழ்ந்து அவ னது துறைநயப்பக் கூறியது.

**இதன் பொருள்.**

(க)சுணங்கணி வனமுலைச் சுடர்கொண்ட நறுநுதன்
மணங்கமழ் நறுங்கோதை (உ)மாரிவீ ழிருங்கூந்த
லுணங்கெழி *லொண்டித்தி நழை(ந)நொசி மடமருங்குல்
வணங்கிறை வரிமுன்கை வரிபார்ந்த வல்குலாய்

---

க (அ) "சுணங்கணி யாகத், தீர்க்கிடைப் போகா வேரிள வனமுலை" பொருந. நடு - நகூ. (ஆ) "பொன்பெறு பூஞ்சுணங்கின் மென்முலை யாய்" சிறுபஞ்ச. சஅ.

உ. "மாரிவீழிருங்கூந்தல்" கலி. கச: ச; கஙக: 'உக. "தத்த மரபிற் ருேன்றுமன் பொருளே" என்னுஞ் சூத்திரவுரையில், 'மரபு என் பது பயிற்சியை; இதனுனே நூல்செய்கின்றகாலத்து வினைமுதலாகிய பொருள்கள் ஒதிய வாய்பாட்டான்வருதல் பெருவழக்கென்று கொள்ளப்படும்' என்று கூறி வினை முதலியவற்றுக்குப் பாகுபடுத் துணர்த்தப்பட்ட சொற்களன்றி மரபாற் பிறசொல் வந்ததற்கு, 'மாரிவீ ழிருங்கூந்தல்' என்பதை மேற்கோள்காட்டினர் இளம்பூரணர்; தொல். உவம. சூ. கஎ.

ந. நொசிவு நுண்மையுணர்த்துதற்கு (அ) "நொசி மருங்குல்" என்பது மேற். தொல். உரி. சூ. எஅ. சே.(ஆ)"நொசிந்த மருங்குலள்" பெருங். (க) ...ச: கப. (இ) "நுழைநொசி மருங்குல்" நைடத. சுயம்வர. கசஉ,
(பிரதிபேதம்) * ஒண்டேத்தி.

து: *சுணங்கு அணிந்த அழகையுடைய முலையினையும்(க)பிறையி-றன்மையைக்கொண்ட நறிய நுதலினையும் நறிய மாலையினையுடைய மணநாறுகின்ற மழை விரும்புங் கரிய கூந்தலினையும் † கூர்மையையுடை அழ்கினையும்(உ)நோக்கினோர் கண் சென்று நுழைந்துபார்க்கும் நுண்மையாலே அவர்க்கு அறியாமையைக் கொடுக்கும் மருங்குலையும் 'வணங்குகின்ற இடையினையுடைய வளையணிந்த முன்கையினையுமுடைய ஒள்ளிய‡ சித்தியாகிய வ. நிறைந்த வல்குலையுடையவளே ; எ - று.

இ (ங)கண்ணூர்ந்த நலத்தாரைக் கதுமெனக் கண்டவர்க்
குண்ணின்ற நோய்மிக வுயிரெஞ்சு துயர்செய்தல்
பெண்ணன்று புனையிழா யெனக்கூறித் தொழூஉந் தொழுதே
||கண்ணுநீ ராக நடுங்கின னின்னகா
(ச)யென்செய்தான் கொல்லோ (ரு)விஃதொத்தன் றன்கட்
பொருகளி றன்ன தகைசாம்பி யுள்ளு
ளுருகுவான் போலு முடைந்து

எ - து: இனிய நகையினையுடையாய்! நின்னைநோக்கித் தொழூஉம்; —தொழுதபின்,புனையிழாய்!என்னைநோக்கி,×உலகத்திற்கண்ணுக்குநிறைந்த நலத்தினையுடைய மகளிரைக் கண்டவர்களுக்கு உண்ணின்ற காமநோய் மிகும்படி கடுக உயிர்போந் துயரைச்=செய்தல் அவர்க்குப்பெண்டன்மையன்றெனக் கூறிக் (சூ) கண்ணும் உருகநின்று நடுங்கினன்; நடுங்கி இவனொருத்தன் தன்

---

க. "சுடர்நுதல்" (கலி. ருஅ: ங.) என்பதற்கு எழுதிய வுரையும் நோக்குக.

உ. "நோக்கு நுழைகல்லா நுண்மைய"பொருந. அ௨.

ங. "கண்ணூர் கண்ணி" பொருந. கசஅ: சிறுபாண். கரு.

ச. "என்செய்தான் கொல்லோ....... :.உடைந்து" எனத் தோழி கூறிய வழி, 'தெருவின்கட் காரணமின்றிக் கலங்குவார்க்கண்டு' எனவும் 'அலர்முலை.......(நாம்' எனத் தோழிகூறியவழி) 'பொன்செய்வாய்', எனவும் தலைவி உறழ்ந்துகூறினளென்றுகூறி 'இது தலைவன் வருத்தங் கூற அதனை யேற்றுக்கொள்ளாது உறழ்தலின் வழுவாய் நாண்மிகுதியாற் கடிதின் உடம்படாமையின் அமைந்தது' என்பர் நச. (தொல். பொருளி. சூ. சச.)

௵. "இஃதொத்தன்" கலி. சுச: அ; என்பதும் அதன் குறிப்பும்பார்க்க.

௬. (அ)"மெய்யுருகிக் கண்ணுருகி நெஞ்சுருகிக் காம வெயில் வெண்ணெய்ப் பாவைபோல் மெலிகின்றாரே" சீவக. ௬அ௨. (ஆ) "கண்புனலூருமென் காதல்" தஞ்சை. ௩௪௫.

(பிரதிபேதம்) * சுணங்கணிந்தழகிய முலை. † கூரிய. ‡ தத்தியாகிய. || கண்ணினீராக. ÷ தொழுதபின்னர் என்னைநோக்கி, × உலகத்திற்குக்கணவனுக்கு. = செய்தவர்க்குப்பெண்.

## இரண்டாவது குறிஞ்சி உசு. ௩௬௫

த்துப் பொருகின்ற களிற்றையொத்த தன்மைகெட்டு மனமுடைந்து ளேயுள்ளே உருகுவான்போலே இராநின்றான்; இவன் ஈண்டு வந்து ன்ன காரியஞ்செய்தான்கொல் என்றான்; எ - று.

ஒருத்தனென்பது இடைக்குறைந்துநின்றது.

(க)தெருவின்கண், காரண மின்றிக் கலங்குவார்க் கண்டுநீ

வாரண வாசிப் பதம்*பெயர்த்த லேதில

நீ நின்மேற் கொள்வ தெவன்

எ - து: அதுகேட்ட தலைவி நீ நம்மாற் நமக்கு நிகழ்ந்ததோர் காரணமின்றியிலே தெருவின்கட் கலங்குவார் சிலரைக் கண்டு நினக்கு ஏதிலவாயிருப்பனவற்றை நீ நின்மேல் ஏறட்டுக்கொள்கின்றதன்மை வாரணவாசியிலுள்ளார் பெறும் அருளுடைமையாகிய பதத்தை நீ நின்னிடத்தே ஏறட்டுக் கோடல்காண்; இது நமக்கு என்னைப் விளையும் ? †எ - று.

(உ) பிறர்வருத்தந் தம்வருத்தமாகக் கொண்டு ஒழுகுவதனை வாரணவாசியென்னும் ஊரிலுள்ளார் ‡பதமென்றான்.

இது "கூறிய வாயில் கொள்ளாக் காலை" (௩) தலைவிகூறியது.

கடி அலர் முலை யாயிழை நல்லாய் கதுமெனப்

(ச)பேரம ருண்க||ணின் றோழி யுறீஇய

(௫)வாரலு ரெவ்வ முயிர் வாங்கு

(௬)மற்றிந்நோய் தீர மருந்தருளா ×யொண்டொடீ

க. "தெருவின்கண ...... கொள்வதெவன" என்பது (அ) தோழி, தலைவற்குக் குறைநேர்ந்து வாயிலாகிக் குறைநயப்பக் கூறியவழி, தலைவி அவன்கூற்றினை யேற்றுக்கொள்ளாது மறுத்ததற்கும் (தொல். களவி. சூ. உ0. நச.) (ஆ) பாங்கியைத் தலைவிமறைத்ததற்கும் (நாற்கவி. சூ. கசஎ) மேற்கோள்.

உ. "மலயத்து நின்றும்' (கோவையார். கநக) என்புழி 'மலயத்து வாழ்வார் பிறர்க்கு வருத்தஞ் செய்யாராகவின்' என்று குறிப்பு எழுதியிருத்தலும் ஈண்டு அறிதற்பாலது.

ந. தொல். கள. சூ. உ0.

ச. "பேரம ருணகண்" கலி. கசசு: எ.

ரு. "நேரிறை வளைத்தோ ணின்றோழி செயத, வாரஞர் வருத்தங் களைநீ யோவென" தொல். கள. சூ. உந. நச. 'நெருநலு' மேற்.

சு. (அ) "மற்றிந்நோய்தீரு மருநதருளாயொண்டொடீ" "நின்முகங்காணு மருந்தினே னென்னுமால்" என்புழி நோய் தீர்தற்குக் காரணமாகிய

(பிரதிபேதம்) *பெயாதலேதில.† என்முள அலா ‡ பிறாபதமென்முர் இது || என்றோழி × ஒண்டொடீ நின்முகங்காணு..............எ-து அதுசேட்ட,



## கலித்தொகை சுO.

(க)நின்முகங் காணு மருந்தினே னென்னுமா
னின்முகந் தான்பெறி னல்லது கொன்னே
(உ)மருந்து பிறிதியா தும்இல்லேற் றிருந்திழா
யென்செய்வாங் கொல்லினி நாம்

எ - து: அதுகேட்ட தோழி அடிபரந்த முலையினையும் ஆராய்ந்த பூண்..
னையுமுடைய நல்லாய்! பெரிய அமர்த்த உண்கண்ணினையுடைய நின் தோழி

மருந்தெனவருங் காரணத்தைக் கருவிக்கண்ணும், நின்முகத்தைக் காண்டல் காரணமாக அதன் காரியமாகப் பிறந்த அருளை மருந்தாதற் றன்மையாக உடையனென வருங் காரியத்தை ஒன்றென முடித்தற் கண்ணும் அமைத்துக் கொள்க. என்பர். நச். தொல். வினை. சூ. ௩எ. (ஆ) "மற்றிந்நோய் தீரு மருந்தருளா யொண்டொடீ யென்புழி, நோய்தீர்தற் கேதுவாகிய மருந்தென்னும் ஏதுப்பொருண்மை கரு விக்கண் அடங்கும்" என்பர் இ - வி உரைகாரர் ; இ - வி. சூ. உ௬௩. (இ) 'நோய்தீருமருந்து........என்னும்ஏதுப்பொருண்மை கருவிக் கண் அடங்கும்' என்பர், சேனாவரையர்; தொல். வினை. சூ. ௩எ. (ஈ) "அகலிருவிசும்பு" பெரும்பாண். க. என்பதற்கு, 'தன்னை யொழிந்த நான்கு பூதமும் தன்னிடத்தே அகன்று விரிதற்குக் காரணமாகிய பெரிய ஆகாயம்' என்றுபொருள்கூறி அதற்கும்(உ)"அரசிருந்து பனிக் கும்பாசறை" முல்லை. ௭௯. என்பதற்கு,'பகையரசிருந்து நடுங்குதற்குக் காரணமான பாசறை' என்று பொருள்கூறி அதற்கும், (ஊ) "புண் டாங்குவேல்" சீவக. உஉ. என்பதற்கு 'பகைவர் புண்ணைத் தாங்குவ தற்குக் காரணமான வேல்' என்று பொருளும் 'வினைத்தொகை; ஏதுப் பொருள்கருவிக்கண் அடங்கும்' என்று இலக்கணமும்எழுதி அதற்கும் "மற்றிந்நோய் தீருமருந்து" என்பதை இவ்வுரையாசிரியர் மேற்கோள் காட்டியுள்ளார். அன்றியும்(எ)உயர்ந்தபால்என்பதற்கு, 'ஒருகாலைக்கு ஒருகால் அன்பு முதலியன சிறத்தற்கு ஏதுவாகிய பால் வரை தெய்வம்' என்று பொருள்கூறி, 'உயர்ந்த பாலை நோய்தீர்ந்த மருந்து போறக் கொள்க' என்றும் எழுதியிருக்கிறார். (தொல். களவி. சூ. உ.) (ஏ)"திருந்தடி மேல்வீழ்ந்திரக்குநோய் தீர்க்கு, மருந்து நீயாகுதலான்" கலி. ௬௩: ௯ - ௧0. என்பது ஒப்புநோக்கற்பாலது.

க. (அ) "நின்முகங் காணு மருந்தினே னென்னுமாலென்புழிக்காட்சியை மருந்தென்றானதலின், காணுமருந்தென்பது வினைப்பெயர் கொண்ட தாம்" என்பர். சேனா; தொல். வினை. சூ. ௩எ. (ஆ) இ - வி. உரை காரரும் இதனையே பின்பற்றுவர்; இ - வி. சூ. உ௬௩.

உ. (அ) "மருந்துபிறி தில்லையா னுற்ற நோய்க்கே" நந். அ௦ க.(ஆ) "மருந்துபிறி தில்லாப் பெருந்துய ரெய்தி" ........(இ) "மந்திர மில்லை வேறோர் மருந்தில்லை மையனோய்க்குச், சுந்தரக்குமுதச்செவ்வா யமுதலா லமுதச் சொல்லீர்" கம்ப. மாயாசனக. கக.

## இரண்டாவது குறிஞ்சி உச. ௩௬௭

...த்தின பொறுத்தற்கரிய மனக்கவற்சியைச் செய்யும் வருத்தம் கதுமென ...யிரைவாங்கும்; அஃது உயிரைவாங்காதபடி ஒண்டொடீ! பின்னை *இந்நோய் ...தற்குக் காரணமான மருந்தை அருளாய்; அம்மருந்துதான் மிகவும் †அரி ...து; நின்முகங்காண்டல்காரணமாக அதனை காரியமாகப் ‡ பிறந்த அருளை ...ந்தாதத்தன்மையாக உடையேனென்று கூறுநின்றான்; ஆதலால் அவன் நின்முகத்தை இக்காலத்தே பெறின் அது மருந்தாவதல்லது வேறு ...தும் மருந்தில்லையாயிருக்குமாயின், = திருந்திழாய்! இனி நாம் என்செய்யக் ...வேமென்றான்; எ - று.

நின்முகங் — காணு மருந்தினேனென்றது தலைவியைக்கருதி. மற்று, ...மாற்று. கொன், காலமுணர்த்திற்று. கொல், ஐயம்.

பொன்செய்வாம்

எ - து: அதுகேட்ட தலைவி பொன்செய்வாம் என நகைக்குறிப்புக் ...றினள்.

அஃது "இசைதிரிந்திசைப்பினும்"என்னும்(க)பொருளியற்சூத்திரத்துக் ×கூறினும்.

உச ஆறு விலங்கித் தெருவின்க ணின்றொருவன்
கூறுஞ்சொல் வாயெனக் கொண்டதன் ∴பண்புணராந்
தேற லெளிதென்பா நாம்

எ - து. அவள் நகைக்குறிப்புக் கூறிப் பின்னரும் உலகவொழுக்கத்தைத் தப்பி ஒருவன் தெருவின்கணணேநின்று கூறுங்கூற்றை உண்மையென்று கொண்டு அதன் உண்மையை உணராமாய் நாம் அதனைத் தெளிதல் எளி தென்று சொல்லக்கடவேமென்றாள்; எ - று.

காமென்றது உயர்த்துக்கூறியது. உளப்பாடுமோம்.

ஒருவன் (உ)சாமா றெளிதென்பா மற்று

எ - து: அதுகேட்ட தோழி பின்னை நின்கருத்து இதுவாயின் ஒருவன் சாந்தன்மை எளிதென்று கூறக்கடவேமென்றாள்; எ - று.

என்பாம், உளப்பாடு

---

க. தொல். பொருளி. சூ. க. இசகுத்திரததிற் கூறியது, 'இயலா' என்றதனால், 'என் செய்வாமென்ற' வழிப் பொன் செய்வா மென்றாற்போல வினவிற் பயவாது இறைபயந்தாற் போலநிற்பனவுங்கொள்க' என்பது.

உ. (அ) "ஈத லிரந்தார்க்கொன் றாற்றாது வாழ்தலிற், சாதலுங் கூடுமோ மற்று" கலி. சுக: கக-உ. (ஆ) "பகையகத்துச் சாவா ரெளியர்" குறள். எஉங. (இ) "சாவ தெளிதரிது சான்றாண்மை" ஏலாதி. சo.

(பிரதிபேதம்) * இன்னேவைத் தீர்த்தற்கு † அரிதென்று நின்முகங்கொண்டல்காரண ‡ பிறந்தவனே || மருந்தாகத், = திருந்திழாய் காம் ÷ காணின்மருந்தினனென்றது, × அடக்கினும் ∴ பண்புணாத்தேறல்.



உஅ சிறிதாங்கே, மாணிழை யாம்ப லலரி * னலர்கென

நா ணு நிறையு நயப்பில் பிறப்பிலி

பூணாக நோக்கி யிமையா னயந்துநங்

கேண்மை விருப்புற் றவனை யெதிர்நின்று

(க)நாணடப் பெயர்த்த நயவர வின்றே.

எ-று: அதுகேட்ட தலைவி மாட்சிமைப்படாத இவ்வூரில் † அம்பல் இனி (உ) அலரினாலே அலர்வதாக வென்று கருதி நாணையும் நிறையையும் விரும்புத லில்லாத, குடிப்பிறப்பிற்குரிய ஒழுக்கம் ‡ நெஞ்சிலில்லாதவனுக்கு அவன் இறந்துபடுமென்று கூறுகின்ற அத்தன்மையே மிக இன்று காணென்றாள். அது கேட்ட தோழி நின் பூணாகத்திற் புணர்ச்சியை மனத்தாற் கருதி இரவுந் துயில்கொள்ளாளாய் நங் கேண்மையை || நயந்து நம்மை விருப்புற்றவனை நாண் அடுகையினாலே எதிர்நின்று மீட்ட நயப்பாடு ∴ வருதலின்று, அதற்குத்தக்கது அறிவாயென்றாள்; எ - று.

"சினனே பேதைமை நிம்பிரி ÷ நல்குர, வனைநால் வகையுஞ் சிறப்பொடு வருமே" (ங) என்பதனான் 'நாணு நிறையு நயப்பில் பிறப்பிலி' எனச்சினம்பற்றி × வரினும் அஃது அவன்காதலைச் சிறப்பித்துவருதலின் அமைந்தது. பிறப்பிலி, பெயர்மாத்திரையாய் இல்லாதவென்னும் பெயரெச்சமறைக்கு' முடிவாய் நின்றது. பிறப்பிலிக்கு ஆங்கே சிறிதென மாறிப் பொருளுரைக்க.

ஆங்கேயென்ற ஏகாரம், தேற்றம்.

"உயர்மொழிக் குரிய வுறழுங் கிளவி" (ச) என்றதனால், தலைவி உறழ்ந்து கூறினாள்.

இதனால், தலைவிக்கு விருப்பமுற்று நினைத்தல் பிறந்தது.

இது தரவும் தனிவிரவி ஐஞ்சீரடி [யும்] வந்த நெடுவெண்பாட்டும் ஐஞ்சீரடிக்கிய குறுவெண்பாட்டும் இடையே முச்சீரடிவந்த கொச்சகமும் வெண்பாவும் தனிச்சொல்லும் குறுவெண்பாட்டும் ஓரடியானென்றும் ஐஞ்சீரடி

---

க. "நாணடப் பெயர்த்தல்" கலி. சஎ உ0.

உ. (அ) "அலரெழ வாருயிர் நிற்கும்" (ஆ) "கவ்வையாற் கவ்விது காம மதுவின்றேற், றவ்வென்னுந் தன்மை யிழந்து" (இ) "காமம், வெளிப் படுந் தோறு மினிது" குறள். ககசக, ககசச, ககசரு.

ங. தொல். பொருளி. சூ. ௬க. இச்சூத்திர வுரையிலும் இப்பகுதி மேற் கோளாக இக்குறிப்பு எழுதப்பெற்றுள்ளது.

ச. தொல். பொருளி. சூ. சச. இதன் பக்கம் ஙகச: ச - ஆம் குறிப்புப் பார்க்க.

(பிரதிபேதம்) * அலர்க்கென † அமடவினத லரிஞலே ‡ நெஞ்சில்லாத|வனுக்கு ‖ வயந்த விருப்புறநவனை, ∴ வருதலினதற்கு, ÷ கல்நுரவெனகால் |.× வரிவுமவனை காதலிசிறப்பித்தலினிதுவமைந்தது



வந்த (க) போக்கிலக்கணமில்லா* நிலைமண்டில வாசிரியச்சுரிதகமும் பெற்று வந்தஉறழ்கலி. † "மண்டிலங் குட்ட மென்றிவை யிரண்டுஞ், செந்தூக் கியல வென்மனார் புலவர்" (௨)என்பதனான் ‡ மண்டிலங்கொள்க. (உஅ)

(௬௩.) எல்லா விஃதொத்த னென்பெறான் கேட்டைக்காண்
செல்வங் கடைகொளச் சாஅய்ச் சான்றவ
ரல்லல் களைதக்க கேளி ருழைச்சென்று
சொல்லுதல் உற்றுரைக் கல்லா தவர்போலப்
பல்லூழ் பெயர்ந்தென்னை நோக்குமற் றியானோக்கின்
மெல்ல விறைஞ்சுந் தலை;

௭ எல்லாநீ, முன்னத்தா னொன்று குறித்தாய்போற் காட்டினை
நின்னின் விடாஅ நிழற்போற் றிரிதருவா
யென்னீ பெறுதநீ தென்;

௧௦ சொல்லின், மறுதீவா ளன்னே யிவள்;
சிறுஅது, ஈத லிரந்தார்க்கொன் றாற்றுது வாழ்தலிற்
சாதலுங் கூடுமா மற்று;

௧௩ இவட்கந்தை, காதலின் யார்க்குங் கொடுக்கும் விழுப்பொருள்
யாதுநீ வேண்டியது;

௧௫ பேதாய், பொருள்வேண்டும் புன்கண்மை யீண்டில்லை யாழ
மருளி மடநோக்கி னின்றோழி யென்னை
யருளீயல் வேண்டுவல் யான்;

௧௮ அன்னையோ, மண்டமா ரட்ட களிறன்னான் றன்னையொரு
பெண்டி ரருளக் கிடந்த தெவன்கொலோ;

௨0 ஒண்டொடீ, நாணிலன் மன்ற விவன்;

ஆயின் ஏஎ;

௨௨ பல்லார்நக் கெள்ளப் படுமடன் மாவேறி
மல்லலூ ராங்கட் படுமே நறுநுத
லல்காள்கண் மாறி விடினெனச் செல்வானு

க. இசசெய்யுள் போக்கிலக்கணமில்லாதஆசிரியசசுரிதகம்பெற்ற உறழ் கலிக்கு மேற்கோள்; தோல். செய். சூ.கடுசு. பேர். நச்.

உ. தோல். செய். சூ. ககஎ.

(பிரதிபேதம் *நிலமண்டல +மண்டலக்குட்ட ‡மண்டலக்கொள்க,





மெள்ளி நகினும் வரூஉ மிடையிடைக்
கள்வர்போ னோக்கினு நோக்குங் குறித்தது
கொள்ளாது போகாக் குணனுடைய னெந்தைதன்
னுள்ளங் குறைபடா வாறு.

இது தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி அவனோடு உறழ்ந்து சொல்லி அவனது நீக்கத்துக்கண் அவன்குறை * மறமைத்து ஏற்பன சொல்லித் தலைமகளைக் குறைநயப்பித்தது.

இதன் பொருள்.

(க) எல்லா (உ) விஃதொத்த னென்பெறுன் கேட்டைக்காண்
(௩)செல்வங் கடைகொளச் சாஅய்ச் (௪)சான்றவ
ரல்லல் களைதக்க கேளி ருழைச்சென்று
(௫)சொல்லுத லுற்றுரைக் கல்லா தவர்போலப்
(௬)+பல்லூழ் பெயர்ந்தென்னை நோக்குமற் றியானோக்கின்
மெல்ல விறைஞ்சுந் தலை

க. (அ) "எல்லாவிஃதொத்தனென்பெருன் கேட்டைக்காண்" என்பது எல்லா வென்பது பெண்பான் மேல்வந்ததற்கும் (தோல். பொருளி. சூ. உச. 'முறைப்பெயர்' இளம்;) (ஆ) "எல்லா விஃதொததன்" என்பது இடைக்குறையாகிய ஒத்தன் என்பது ஒருத்தன் எனக் குறிப்பானறியவந்ததற்கும்(நன். பெயரி. சூ. கஉ. மயிலை) மேற்கோள்.

உ. "'இஃதொத்தன்" (கலி. கூச: அ) என்பதன் குறிப்புப்பார்க்க.

ங. "நல் கூர்ந்துஞ் செல்வ ரிரவாதார்" நாலடி. உஎ௦.

ச. "புனத்தே வருவர்நல் லோர்குறை போலப் புகலவொன்று, மனத்தே யெழுஞ் சொல்ல மாட்டார் வருந்துவர் வண்டமைழகொன், டினததே பிரிந்த கலவின வாசிற்ப ஈஙகிவர்தா, நினைத்தே யுழல்கின்ற தென்னறி யேஞென்று சேரிழையே" அம்பிகா. அஅ.

இ. "கரப்பிலா நெஞ்சிற் கடனறிவார்" (குறள்-க௦௰ங)என்புழி, கடனறித லென்பதற்கு மானமறிதலென்று பொருளிசைத்து, 'அதனையறிதல் - சொல்லுத லுற்றுரைக்கலாகாமைக் கேதுவாய அதனியல்பினை யறிதல்' என இசசொற்றொடரை முதற்சார்த்தி விளக்கமெழுதியிருத்தல் இங்கே அறிதற்பாலது.

சு. (அ) "கண்களவு கொள்ளுஞ் சிறுநோக்கம்"(ஆ)"நோக்கினு ஞேக்கி யிறைஞ்சின ளஃதவள், யாப்பினு ளட்டிய நீர்" *(இ) "யானேக்குங் காலை நிலனேக்கு நோக்காக்காற், றானேக்கி மெல்ல நகும்" குறள். க௦கஉ.. க௦கங. க௦கச. (ஈ) "தன்னையான் முகத்தை நோக்கிற் றன் முலை முகத்தை நோக்கும்" சீவக. ககூஉசு.

(பிரதிபேதம்) * மருமமற்கேற்பன† பல்துழ்ப்பெயர்த்த.

இரண்டாவது குறிஞ்சி உரு. ௩ள்க

எ - து: எடீ! இவனொருத்தன் என்குறைபெறுதவன்? *இவன் கேட்டைப் பாராய்; (க)அறிவுடையோர் தம்முடைய செல்வம் மூடிவை அடைகையாலே மிடிதத்துத் தம்முடையவருத்தத்தைக் களைதல்தக்க (உ)உறவானவரிடத்தே சென்று தங்குறையை அவர்க்கு வாய்விட்டுச் சொல்லத்தொடங்கிப் பின்னை அத்னை முடியச சொல்லமாட்டாதிருப்பாரைப்போலத் தான்(ங)கூறக் கருதியதனைக் கைவிட்டு என்னைப் பன்முறையாகப் பார்க்கும்; †பின்னையான் தன்னைப்பார்க்கின் தான் மெத்தெனத் தலையிறைஞ்சி ‡நிற்கும்; எ - று.

இது தலைவன் தம்மிடத்து வருகின்றமைகண்டு தலைவிக்குக்கூறிப், பின்னர் அவனெதிர்சென்று அவனை|| நோக்கிக் கூறுகின்றாள்.

எ (ச) ×எல்லா நீ, முன்னத்தா னென்று குறித்தாய்போற்காட்டினை
(ரு)நின்னின் விடாஅ (சா)நிழற்போற் றிரிதருவா
யென்னீ **பெறாதீ தென்

எ - து: எடா! நீ குறிப்பாலே எம்மோடு ஓர் நட்புச்செய்யக் குறித்தாய் போல எமக்கு அறிவித்தாயாய் நின்னைவிட்டு நீங்காத நிழற்போல என்னை விட்டுநீங்காமற்றிரி தருகின்றவனே! நீ பெறாத குறை ††யாது? அதனை இது வென்று ‡‡கூறு; எ - று.

இது குறையுறவுணர்தல்.

---

க. "இன்மை யொருவற் கிளிவன்று சால்பென்னுந், திண்மையுண் டாகப் பெறின்" குறள். கூஅஅ.

உ. (அ) "செழுங்கேளிர நிழல்சேர" .....(ஆ) "பற்றற்ற கண்ணும் பழமைபா ராட்டுதல், சுற்றத்தார் கணணே யுள" குறள். ருஉக.

ங. "கூறுவங் கொல்லோ கூறலங் கொல்லெனக், கரந்த காமம்" அகம் ககூ௮.

ச. (அ)"எல்லாநீ . ..... ..பெறாதீ தென்" என்பது தோழிதலைவனை விளித்துக்கூறலின் வழுவாய் அமைந்தது" என்பர், நச. (தொல். பொருளி. சூ. உசு.) (ஆ) விளியேற்குமென எடுத்தோதாதனவற்றுள் இருபாற்கும் பொதுவாகிய ஆகார வீறுகிய எல்லாவென்பது எடா

வென்னும் பொருளில் வருதற்கு "எல்லாரீ முன்னத்தா னென்று குறித்தாய்போற்காட்டினே" என்பது மேற். தோல்.விளி. சூ. கஉ. நச்.

௫. "நின்னின் விடாஅ... .. .. ..பெருந்தீதென்" என்பது குறையுற வுணர்தற்கு மேற்கோள்; தோல். களவு. சூ. ௩௯. நச.

௬. "நிழறன்னே, வீயா தடியுறைந் தற்று" குறள். ௨0௮.

(பிரதிபேதம்) *இவனுடையகேட்டை.' † பின்பான், ‡ கிறகுமெனத் தோழி தலைவியை நோக்கிக்கூறினள் இது, || நோக்கி மேற்கூறுகின்றனென்று கொள்க, × யடாரீ ** பெருந்தீதென் †† யாதுதான் அதனை, ‡‡ கூறென்றன.



க0 சொல்லின், மறுதிவாள் மன்னோ விவள்

எ- து: *யான் என் குறையைசசொல்லின் இவள் மிகவும் மறுதிரு பாளோ ; † எ - று.

இது தலைவன் தன் நெஞ்சோசொவினது. "ஐயக் கிளவி யாடூஉவிற் குரித்தே" (௧)என்பதனுன் ஐயக்கிளவி தலைவற்குரித்தாய் வந்தது.

மறுதிவாள், வினைத்திரிசொல். ஓகாரம், வினு.

கக (௨)செறுஅது, (௩)ஈத லிரந்தார்க்கொன் றாற்றாது வாழ்தலிற் சாதலுங் கூடுமா மற்று

எ – து: அங்ஙனம் உசாவித் தம்பால் இரந்தவர்களுக்கு ‡யாதானு மொன்றைமுகமாறாது ஈதலைநடத்தாதுஉயிர் || வாழலிற்பின்னைசசாதலுங்கூடு மென்றான் ; எ - று

க௩. (௪)இவடந்தை, காதலின் யார்க்குங் கொடுக்கும் விழுப்பொருள் யாதுநீ வேண்டி யது

---

க. தோல். பொருளி. சூ. ௪௪. இசசூத்திரவுரையில் இச்செய்திக்கே "சொல்லின் ........ ..விவள்" என்பது மேற்கோள்.

உ. (அ) "உயர்ந்தேந்து மருப்பிற் கொல்களிறு பெறினுந், தவிராந்துவிடு பரிசில் கொள்ளலெ னுவந்தநீ, யின்புற விடுதி யாயிற் சிறிது, குன்றியுங் கொள்வல்" (ஆ) அகனக வாரா முகனழி பரிசி, லுளி லானர் வேளா ரல்லர்" (இ) "உணமெகிழ்ந் தீயிற் சிறிதெனினுங் குன்றுபோற் கூடும் பயன்" (ஈ) "இல்லார் மொழிந்தவை, மென் மொழியா லுண்ணெகிழ்ந் தீவானேல் விணனோரா, வின்மொழியா லேத்தப்படும்" (உ) "நகை முகமே நாண்மலரா, வின்மொழியின் வாய்மையயே தீங்காயா-வண்மை, பலமா நலஙகனிந்த பண்புடையார்"

ந. (அ) "இன்மை யுரைத்தார்க் கதுநிறைக்க லாற்றாக்காற், றன்மெய் துறப்பர்ன் மலே" கலி. சங: உகூ - உஎ. (ஆ) "கருங்கட லுடுத்த மல்லன் ஞாலத்தரச, செம்மையின் வழாஅது கொடைக் கடன் பூண்டு, வாழ்வது பொருந்தா தாகிற், சாவது மினிதவர் வீவது முறு மே" யா-வி. கூ. ஙந. (இ) "மள்கலில் பெருங்கொடை மருவி மண் ணுளோ, ருள்கிய பொருளெலா முதவி யற்றபோ, தெள்கலி லிரவ லர்க் கிவ தின்மையால், வெள்கிய மார்தரின்" கம்ப. கார்காலப் கoங.

ச. (அ) "காமஞ்சாலா விளமை யோள்வயின்" என்னும் சூத்திரவுரையில் "புல்லித்தோன்றுங் கைக்கிளேயெனவே காமஞ்சான்ற இளமையோள் கண் நிகழுங்கைக்கிளே இத்துணைச சிறப்பின்றாயிற்று; அஃது 'எல் (பிரதிபேதம்) *அதுகேட்ட தலைவன்யான் † எனத் தன்னெஞ்சொடுசொலினான், இது "மைய கிளவியாடவர்க்கு, ‡யாதானுமொன்று முகமறுத, ||வாழ்தலின்.

## இரண்டாவது குறிஞ்சி உரு. நஎந

வ எ-து அது கேட்ட தோழி இவள் தந்தைஇரப்பார்மேலுள்ள*காதலால் வரவலர்யார்க்குஞ் சிரிய †பொருள்களைக் கொடுக்கும், நீவேண்டியபொருள் கொடாதுதானென்றான்; எ - று.

இஃது "உயர்மொழிக் குரிய வுறழுங் கிளவி, யையக் கிளவியாடேவிற் குரித்தே" (க)என்பதனால், தோழி உறழ்ந்து கூறினாள்.

கடு பேதாய், பொருள்வேண்டும் புன்கண்மை யீண்டில்லை யாழ
மருளி மடநோக்கி(உ)னின்றேழி யென்னை
யருளீயல் வேண்டுவல் யான்

எ – து: அதுகேட்ட தலைவன் கூற்றின் குறிப்பறியாதவளே! என்னிடத்துப் பொருளை இரக்கும் மிடியில்லை. மருண்டு மடப்பத்தையுடைத

---

லாவிலைதொத்தன்' என்னுங் கலியுள் 'இவடந்தை, காதலின்யார்க்குங் ... ... ..வேண்டுவல்யான்" எனவரும். இது கைகோளிரண்டினுங் கூறத்தகாத வாய்பாட்டாற் கூறலிற் கைக்கிளை யென்றார். குறிப்பென்றதனாற் சொல்லியின்புறினும் தலைவன்றன் குறிப்புநிகழ்ந்தது புறத்தார்க்குப் புலனாகாதென்பதூஉம் அகத்து நிகழ்ச்சியறியும் மனைவியர்க்காயிற் புலனாமென்பதூஉங் கொள்க" என்பர் நச; தொல். அகத். சூ. ௫௦. (ஆ) "வைகல் வைகலை யவ்வழிக், கையுறையேந்தினிர் வருதிர் மற்றலை, தறிகலம் யாமெமக் குறைப்பிற், பெறுகுவிரெங்தை பெருவண்மையனே" தமிழ்நெறி. மேற்கோள்.(இ) "வேண்டுவகொடுக்கும், போதல் வேண்டா பொருட்குறை வுண்டெனின், னேதமில்லை யிவணி ராயின்" பெருங். (ந) கூ: கஅக – ந.

க. தொல். பொருளி. சூ. ௪௪. 'உயர்மொழிக்குரிய வுறழுங் கிளவி' என்புழி உறழ்ந்து கூறலை நால்வகைப்படுத்தி, "ஈத லிரந்தாக்கொன்றொற்று துவாழ்தலிற், சாதலுங் கூடுமாமற்று" எனத் தலைவன் கூறிய வழி, "இவடந்தை. காதலின் யார்க்குங் கொடுக்கும் விழுப்பொருள், யாதுநீ வேண்டியது" எனவும், ("பேதாய் பொருள்வேண்டும் .. . .. வேண்டுவல் யான்" எனத் தலைவன் கூறியவழி) 'மணடமரட்ட களிறன்னன் றன்னையொரு, பெண்டி ரருளக் கிடந்த தெவன்கொலோ' எனவும் தோழி உறழ்ந்து கூறினுளென்று கூறி, 'இவை அவன் வருத்தத்தில் எதிர் கூறததகாதன கூறலின் வழுவாய்த் தலைவி கருத்தறிந்து உடம்படவேண்டுமென்று கருதுதலின் அமைந்தது' என்பர். நச.

உ. "இருளுறழ் கூந்தலா ளென்னை, யருளுறச் செயினுமக் கறனுமாகுதுவே" கலி. க௪௦: ௩௩ – ௩௪.

(பிரதிபேதம்,) †காதலினால் யாகரும் | பொருள்களை கொடுக்கும் | யாதுதானென்றான் பேதாய்.



தாகிய நோக்கினையுடைய நின் தலைவி என்னை அருளுதலை யான் * இரப்பே னென்றான் ; எ - று.

௧௮ அன்னையோ,

எ-து: † அத்தன்மையையோ ? எ - று.

இஃது அதுகேட்ட தோழி இவனிடத்துக் களவொழுக்கம் அறியாள் போன்றுகூறியது.

(௧)மண்டம ரட்ட களிறன்னான் றன்னையொரு
(௨)பெண்டி ரருளக் கிடந்த தெவன்கொலோ

எ-து: ‡மிக்குச செல்கின்ற போரிலே பகைவரைக்கொன்ற களிறுபோல் வான்றன்னை ஒரு மகளாயிருக்கின்றவள் அருளும்படியாகக் கிடந்த குறை எத்தன்மையதோதான் ; ||எ - று.

இது தோழி தலைவன் நீங்கியபின்னர்த் தலைவியோடுசொலியது.

௨௦ ஒண்டொடீ, நாணிலன் மன்ற விவன்
ஆயின் ÷ஏஎ;
௨௨ (௩)பல்லார்நக் கொள்ளப் படுமடன் மாவேறி
மல்லலூ ரங்கட் படுமே நறுநுத

---

௧. “மண்டமர் முருக்குங் களிறனை யார்க்குப், பெண்டிர் கூறும் பேரறி வுண்டோ” மணி. ௧௮: ௧௪௦-௪௧.

௨. பெண்டிரென்பத னீற்றிலுள்ள ‘இர்’ என்னு மிடைச்சொல் முன் னிலையிலன்றி ‘ர்’ ‘அர்’ என்பவைபோலப் படர்க்கைப் பன்மையிலும் வரும் விகுதிபோலும்; மகளிர், கேளிர், வேளிர், புத்தேளிர் முதலிய வற்றில் இவ்விகுதி வருதலும் இசசொல் “பெண்டிரும் வாழாரோ” (நாலடி. ௧௧௪) “பெண்டிராயிற் பிறர் நெஞ்சு புகாஅர்” (மணி. ௨௨:

சகூ) "பெண்டிர் மதியார்" (வளையாபதி) எனப் பன்மைவினைபெற்று முடிதலும் இக்கருத்தை வலியுறுத்தும்; இங்கே இதனை, "பத்தினிப் பெண்டிர்" (மணி. கஎ: க) என்புழிப்போல ஒருமையில் மயங்கிவந்த தென்று கொள்க.

ந. (அ) "மாவென மடலூர்ப பூவெனக், குவிமுகி ழெருக்கங் கண்ணி யுஞ் சூடுப, மறுகினார்க்கவும்படுப,பிறிதுமாகுப காமங்காழ்கொளினே" குறுந். கஎ. (ஆ) "மாவென் றுரைத்து மடலேறுப மன்று தோறும். பூவென் றெருக்கி னிணர்சூடுப புண்மை கொண்டே. பேயென்

(பிரதிபேதம்) * இரப்பேனென்றான. இது உயர்மொழிக்குரிய வுறழுங்கிளவி ........ யுரித்தே என்பதனுற றோழியுறழ்ந்து கூறினள அனையோ || அதுகேட்ட தோழிஅத்தன்மையோவென்றிவனிடத்துககளவொழுக்கமற்யானபோன்று கூறினுள மண்டமரட்ட. ‡ அதுகேட்டுத் தலைவன் சீங்கிய பிணா மிக்குச் செல், ||எனத்தலைவியொடுசோவினுள். ஒண்டொடீ ÷ என

## இரண்டாவது குறிஞ்சி உரு. ந.எரு

னல்காள்(க)கண் மாறி விடினெனச் செல்வானு
மெள்ளி நகினும் வரூஉ மிடையிடைக்
(உ.)கள்வர்போ னோக்கினு நோக்குங் குறித்தது
கொள்ளாது போகாக் குணனுடைய னெந்தைதன்
னுள்ளங் குறைபடா வாறு

எ - து *ஒண்டொடீ! இவன் எந்தைதன் உள்ளங் குறைபடாதபடி வேண்டுவன †கொடுத்துந் தான் குறித்ததொன்று கைப்பற்றுமற் போகாக் குணத்தையுடையன், அதனால் நீ அருளினுந் தாழ்வில்லை; அவன்றான் குறை யுற்றுநிற்கின்ற காலத்து யான் தன்னை இகழ்ந்து சிரித்தாலும் பலகாலும்

வரும்; அக்குறையுறவுக்கு நடுவேநடுவே கள்வர் தாங்குறித்த‡பொருளை நோக்காது நோக்குமாறுபோல நின்னை மனநோக்காதுநோக்கும்; அதனான் இவனுயின் அறுதியாக என ! || நாணமிலன். நாணமின்மையால் இவன் போகின்ற போக்குப்பலருஞ் சிரித்து[5] இகழப்படு மடன்மா யான் ஏறும்படி நறிய நுதலினையுடையாள் அருளாளாய் அருளைமாறியேவிடின் அவளோடு என்னிடை நிகழ்ந்தது ஊரிடத்தே அலராமேயெனக் கருதிச்செல்வான் ÷ போலவிருந்தது; எ - று.

இஃது உசாவியபின், தோழி அவளை நோக்கி, மேல் இதற்குத்தக்கது நீ அறிந்து செய்யெனக் குறைநயப்பித்தது

(௩.)என்னிடைநிகழும்வருமென்றது தன் கண்நிகழ்ந்த எள்ளல்பொருளாகநகை பிறந்தது. ஏறி.ஏற.(௪)எந்தைஎன்றது,தலைவிதந்தையை. நோக்கினுமென்றது

---

றெழுந்து பிறரார்ப்பவு நிற்ப காம, நோய்நன் கெழுந்து நனிகாழ் கொள்வ தாயினக்கால்" வளையாபதி.

௧. (அ) "பிறனைக், கொலையொக்குங் கொண்டுகண மாறல்" நான். ௮. (ஆ) "கொண்டுகண் மாறல் கொடுமையிற் றுவ்வாது" மூது. ௩எ. (இ) "கண்மாறி நீங்கினன்" மணி. ௩: ௪௦ - ௪௧.

௨. வினைபயன் மெய்யுரு வுவமை கட்குரிய வென்று பாகுபடுக்கப்பட்ட உவமசொற்களன்றி மரபான் வருவனவு முண்டென்பதற்கு, 'கள்வர் போனோக்கினு நோக்கும்' என்பது மேற்கோள்; தொல். உவமை. சூ. ௧எ. இளம்.

௩. தொல். மெய்ப். சூ. ௪. பேர். உரையிலும் இப்பகுதி இதற்கே மேற்.

௪. "அன்னை யென்னை யென்றலு முளவே" என்புழி உம்மையாற் பிறவு முளவென்றுகூறி, தோழி தலைவிதந்தையை எந்தை யென்றுகூறிய தற்கு 'எந்தைதன், னுள்ளங் குறைபடா வாறு' என்பதை மேற்கோள் காட்டுவர் நச்; தொல். பொருளி. சூ. ௫௨.

(பிரதிபேதம்) * உசாவியபினனும் அவளைநோக்கி ஒணட்டாட † கொடுத்துயத்தான் குறித்த ‡ பொருளை நோக்குமாறு||நாணமிலன் இக்நாணமின்மையால்இவன் ÷ போலவிருந்ததுமேல்இதற்குததக்கது நீயறிந்துசெயயெனக்குறைநயப்பித்தாள்எனவி,

நோக்கனோக்கம். என! இகழ்ச்சிக்குறிப்பு, "முறைப்பெயர் மருங்கி கெழுதலைப் பொதுச்சொ, னிலைக்குரி மரபி னிருவீற்று முரித்தே." (க)என பதனான், எல்லாவிஃதொத்தன் எல்லாவென இருபாற்குமாய்நின்றது.

இதனால், தலைவிக்கு நினைத்தல் பிறந்தது.

இது ஞகோள் இரண்டினுங் கூறத் தகாதனவாகப், பொருள் யாது நீ வேண்டியதென்றும், அருளியல் வேண்டுவல் யானென்றுங, கூறலிற் "காமஞ் சான்றவிளமையோ" (உ)ளாக நிகழ்ந்த கைக்கிளையாம்.

இது தனிவிரவின நெடுவெண்பாட்டும்ஐஞ்சீரடுக்கிய குறுவெண்பாட்டும் ஓரடியானென்றும் ஐஞ்சீரடுக்கிய குறுவெண்பாட்டு மூன்றும் கொச்சகமும் ஓரடியானென்றும் தனிச்சொல்லும் வெள்ளைச்சுரிதகமும் பெற்ற கொச்சகக்கலி. (௨௫)

(௬௨.) எல் லிஃதொத்த னெனிலன் றன்னொடு
மேவேமென் பாரையும் மேவினன் கைப்பற்று
மேவினு மேவாக் கடையு மஃதெல்லா
நீயறிதி யானஃ தறிகல்லேன் பூவமன்ற
௫ மெல்லிணர் செல்லாக் கொடியன்னாய் நின்னையான்
புல்லினி தாகலிற் புல்லினெ னெல்லா
தமக்கினி.தென்று வலிதிற் பிறர்க்கின்னா
செய்வது நன்றாமோ மற்று;
௯ சுடர்த்தொடீ, போற்றாய்களைநின்முதுக்குறைமைபோற்றிக்கேள்
வேட்டார்க் கினிதாயி னல்லது நீர்க்கினிதென்
றுண்பவோ நீருண் பவர்;
௧௨ செய்வ தறிகல்லேன் யாதுசெய் வேன்கொலோ
வைவா யரவி னிடைப்பட்டு நைவாரா
மையின் மதியின் விளங்கு முகத்தாரை
வெளவிக் கொளலு மறனெனக் கண்டன்று;

கசு அறனு மதுகண்டற் ருயிற் றிறனின்றிக்
கூறுஞ்சொற் கேளா னலிதரும் பண்டுநாம்
வேறல்ல மென்பதொன் றுண்டா லவனொடு
மாறுண்டோ நெஞ்சே நமக்கு.

---

க. தொல். பொருளி. சூ. உசு. இவருரையில் இதற்கு இப்பகுதிகள் மேற்கோள். இந்நூற்பக்கம் ரு௭ο: க. (அ) ருஎக: ௭. குறிப்புப்பார்க்க.

உ. தொல். அகத். சூ. ௫ο. இந்நூற்பக்கம் ருஎஉ: ௭.(அ) குறிப்புப்பார்க்க.

## இரண்டாவது குறிஞ்சி உசு. ருஎஎ

இஃது "ஏறிய மடற்றிறம்" என்னும்(க)சூத்திரத்து மிக்க காமத்து மிடலென்றதனால், தலைவனுந் தலைவியும் உறழ்ந்துகூறித் தலைவி கூடக்கருதியு பெருந்திணை.

### இதன் பொருள்.

(உ)எஎ யிஃதொத்த னெணிலன் றன்னொடு
மேவேமென் பாரையு மேவினன் கைப்பற்று
மேவினு மேவாக் கடையு மஃதெல்லா
நீயறிதி யானஃ தறிகல்லேன் (ரு)பூவமன்ற
ரு மெல்லிணா செல்லாக் கொடி யன்னாய் நின்னையான்
புல்லினி தாகலிற் புல்லினெ (௪)†னெல்லா
தமக்கினி தென்று வலிதிற் (ரு)பிறர்க்கின்னா
செய்வது நன்றாமோ மற்று

---

க. தொல். அகத். சூ. ௫க. இச்சூத்திரத்தின் நச்சினார்க்கினியருரையில் "எஎ இஃதொத்தன் ............ நன்றாமோ மற்று" என்பது மிக்க காமத்து மிடலுக்கு மேற்கோள்.

உ. (அ) "எஎ இஃதொத்த னெணிலன்றன்னொடு" என்பது எஎ யென்பது இசைநிறையாய் வந்ததற்கு மேற்கோள்; தொல். இடை. சூ. உ௭. நச். இ-வி. சூ. உஎஅ. (ஆ)செறற் சொலென்பது செறலினுற் கூறுஞ்சொல் என்று கூறி, 'எஎ யிஃதொத்தன்' என்றவழி இஃதென்பது செறல்

பற்றி வந்ததென்றம் (தோல். கிளவி. சூ. ருரு. 'குழமை') (இ) ஈரள பிசைக்கு மிறுதியிலுயிர் அளபெடை பெற்றுவரும் காலத்திற் பொருள்வேறுபடுமென்றகூறுழி எ, அளபெடுத்துவருதற்கு "எஎ இஃ தொத்தன்" என்டதைமேற்கோள்காட்டி எஎ இகழ்ச்சியை யுணர்த்திற் றென்றும் (தோல். இடை. சூ. ௩௨. 'ஈரளபு') கூறுவர்; தெய். (ஈ) எஎ இசைநிறையாய் வந்ததற்கு, சேனாவரையர் உரையிற் காணப்படும் "எஎ இஃதொத்தனென்பெருன் கேட்டைக்காண்" என்பதில் பின் இரு சீரும் கலி. ௬௧-ம் பாடலில் உள்ளவை; எழுதுவோரால் மயங்கிச சேர்த்தெழுதப்பட்டனபோலும்; தோல். இடை. சூ. ௨௪.

௩. "பூவமன் றன்று சுனையு மன்று" கலி. ௫௫: ௧௨.

௪. எல்லா வென்பது ஆண்பாலன்மேல் வருதற்கு "எல்லா............மற்று" என்பது மேற்கோள்; தோல். பொருளி. சூ ௨௪. 'முறைப்பெயர்' இளம்.

௫. (அ) "பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா, பிற்பகற் றாமே வரும்" குறள். ௩௧௯, (ஆ) "பிறர்க்கின்னா செய்தலிற் பேதைமை யில்லை" அறநெறி. ௬௫.

(பிர கிபேதம்) * என்பாரைமேவினன் † எல்லாந்தமக்கினி.





எ - து: *இவனொருத்தன் தன்னோடுபுணர்ச்சிக்குறிப்பின்றிநிற்பாரையு தான் புணர்ச்சிக்குறிப்புடையனாய்க் கையாலே வலிதிற் பிடித்துக்கொள்ளு. ஆதலால் எஎ நாணிலனாயிருந்தானெனத் தலைவி கூறினாள்; அதுகேட்ட தலைவன் அப்புணர்ச்சிக்குறிப்பினது பகுதியாகிய மெய்ப்பாடெல்லாம் நின் னிடத்துப்பொருந்துதலைச செய்யினும் பொருந்தாத இடத்திலுமுள்ள நன்று தீது நீ அறியக்கடவை; யான் புணர்சசிக்குறிப்பை அறிதலைச†செய்யேன்; பூ நெருங்கின மெல்லிய கொம்புநீங்காத கொடியையொப்பாய்! நின் மேனி

பிரதிபேதம்) ✣ என இகழ்ச்சிசகுறிப்புஇயறெருஞ்செயயேன், முகைநெருங்கின † செய்தது இனபத்தைத் தருமோவெனமுன் இது || பரிபருககின். ÷ சுடாத்தொடீஇ. × அல்லதை. ∴ இடைப்பாடு.

## இரண்டாவது குறிஞ்சி உகு. ௬எ௬

(க)மையின் மதியின் விளங்கு முகத்தாரை
*வெளவிக் கொளலு மறனெனக் †கண்டன்று

எ - து: அதுகேட்ட தலைவன் சுடர்த்தொடீஇ | நின் முதுமைக்கண் உறைகின்ற நிலைமை எண்டுப் போற்றுது கைவிடு; யான் கூறுகின்றதனைப் பேணிக் கேள்; நீருணபாரசிலர் தண்ணீரை விரும்பினர்கு அஃது இனிதாயின் உணணுமதல்லது ‡அந்நீர்க்கு இனிதாயிருக்குமென்று கருதி உணபரோ உணணா காணென்றான்; என்று பின்னும் ஒரு துவாபினையுடைய பாம்பினது பார்வையிலே அகப்பட்டு வருத்தம்வந்து மேற்செய்யும் காரியம் அறிகல்லேன்; இனி யாதுசெய்வேன்கொல்லோ என நெஞ்சொடுகிளந்து, மறுவில்லாத மதி போல விளங்கும் முகத்தினையுடைய மகளிரை வலிதிற்புணர்தலும் (உ) ஒரு மணமென (ந)நூல்கண்டதெனத் துணிந்துகூறினன்; எ - று.

ஐவாயரவென்றது தலைவியை.

கரு அறனுமதுகண்டற் றாயிற் றிறவின்றிக்
கூறுஞ்சொற் கேளா னலிதரு (ங)பண்டேபோல்

(எ) "ஊர்தலை காக மகன்முறை காணத்தகமன்று" திருவாவடுதுறைக் கோவை. ககம.

க. "அவிர் மதிக்குப் போல, மறுவன்றோ மாதர் முகத்து" குறள். ககஎ.

உ. (அ) ஒருமணமென்றது இராக்கத மணமென; அஃது ஒருதலைவன் ஒருதலைவியை அவளாலும் அவளுடைய தமராலுமன்றி வலிதிற் பெறுதல். (ஆ) "மலிபொற்பைம் பூணின மாலுற்ற மைந்தர், வலிதிற்

கொண்டாள்வதே யென்ப - வலிதிற், பர்ரக்கத்தச் செய்துழலும் பாழி நிமிர்தோ, ளிராக்கதத்தார மன்றல் விபல்பு” தொல். கள. சூ. க. மேற்கோள்.(இ)“மாதர் தங்களை வன்மையிற் பற்றுத லரக்கர்,ந்தி” பேநர். முசுகுந்தன். ௩க.

௩. நூலென்றது வேதத்தை; “மறையோர் தேஎத்து மன்ற லெட்டனுள்” (தொல். கள. சூ. க.) “அந்தண ரருமறை மன்ற லெட்டனுள்” (இறை. சூ. க.) என்பவையும் அவற்றினுரையும் பார்க்க.

௪. (அ)“பண்டொரம் .. .. .. .....நமக்கு” இது மறுத்தெதிர்கோடற்குமேற்கோள். நாற்கவி. சூ. கஉஎ. (ஆ) “ஒன்றி யுயர்ந்த பால தாணையி, னொத்த கிழவனுங் கிழத்தியுங் காண்ப” (தொல்.களவியல். சூ. உ. நச்) என்பதும் அதன் உரையும் (இ) “விளிபுமெ னின்னுயிர் வேறல்ல மென்பா, ரளியின்மை யாற்ற நினைந்து” (குறள். கஉ0க.) என்பதும் அதன் பரிமேல். உரையும்(ஈ) “நிட்டி விடமுண நின்னுயிர் போகாட், கட்டழ லீயத் தென்னுயிர் சுட்டே, னுவவண மருங்கினின் பாலுள்ளர்,

(பிரதிபேதம்) *யைஇக்கொளாலும், †காணடன்று கொணடளறு ‡ அங்ஙா இணர்தாயிருக்கும்.

௩_அம் கலித்தொகை சஉ.

வேறல்ல மென்பதொன் றுண்டா லவனொடு
மீ்றுண்டோ நெஞ்சே நமக்கு

• எ-து: அதுகேட்ட தலைவி நூல் உயர்ந்த மணத்தைக்கூறப்பட்ட(க)உவ ஒழுக்கமும் அத்தன்மைத்தாயிருக்குமாயின், அவனும் யான் மறுத்துக்கூறுஞ் சொல்லைக் கொள்ளாது திறனன்றி நலியுமாயின், அவையேயன்றி அவன் மனத்து முற்பிறப்பில் யானும் அவனும் வேறல்லமென்பதொன்று அவனிடத் துண்டாயிருக்குமாயின், நெஞ்சே அவனோடு நமக்கு இனி மாறுபாடுண்டோ வெனப் புணர்ச்சிக்கு உடம்பட்டுக்கூறினாள்; எ - று.

அறனுமதுகண்டற்றென்பது ஆங்குநெஞ்சழிதல். தான்மறுத்துரைப்பவும் தன்மேல் அவன் விருப்பஞ்செய்தமை கண்டு பண்டு நாம் வேறல்லமென்ப தொன்று அவனிடத்துண்டாலென்றாள். (உ)இது தீதாமாதலான் அடியோர் தலைவராகவந்த பெருந்திணை.

---

தவிர்விலே ளுதலிற் றலைமக டோன்றி" (உ) "நினக்கிவன் மகனுத் தோன்றிய தூஉ, மனக்கினி யாற்குநீ மகளாய தூஉம், பண்டும் பண்டும் பல்பிறப் புளவாற், கண்ட பிறவியே யல்ல காரிகை" மணி. உக: கக-கசு. உகூ-நஉ. என்பவைகளும் எண்டு ஒப்புநோக்கற்பாலன.

க. (அ)"விட்டுவிளங்கு மணிமுடியாய் வேதஞ்சொன்ன பிரமாதி, யெட்டு மணத்தி லொருமணமா மரக்கர்குலத்தி னியல்பறிவை, கட்டமரிய காவலேபுங் கலக்கிப் புக்குக் கன்னியரை, முட்டி யவரைக் கொடு போந்து வேட்கை முறையே யென மொழிந்தாள்" இராமா. திக்கு விசயப். கநஅ. (ஆ) "கையின் மாலை யிவற்கெனக் கன்னியர், வெய்ய செஞ்சொடு மின்னென வந்தவர், வைய மன்னன் வயதிலேநோக்கியே, மையமுற்றன ரன்புறு காதலார்; - எனே வேந்த ரெதிரிவரைப்பெருந், தானை சூழ்மணிச சந்தனத் தேற்றியே, சேனை மாமதஞ் சோருங் கடதட, யானை யென்ன விளவலொ டேகினன்; - முறையினுவன்றி மொய்ம்பிற் கவர்வதெக், குறையினுலெனக் கோக்குலங் கூடிவந், திறைவனேடெதி ரேற்றலில் வீரரைப், பிறைமுகக்கணை யாற்பிளந் தோட்டினன்; ..... .. ..- அம்பிகைக்கு மம் பாலிகைக்கும்பதி, யெம்பி யேயெழி லாலென் றிசைவுறத், தம்பி தன்னைத் தனஞ்சயன் றன்னெதிர், வம்பினுன்மிகு மாமணஞ் சேர்த்தினன்" வில்லி. குருகுல. கஉந- கஉஅ.(இ)"சூழ்படை கிழியத்தெய்வச சுடர்மணிப் பொலந்தேர் தூண்டி, யாழ்கட லவனியாளு மரசருந்காண வாங்குப், போழ்படு திங்களன்ன புதுமிலாக் கற்றைதூற்றும், காழிள மூலையினுளைக் கவர்ந் தனன் கமலக் கண்ணன்...... ..... ..ஆழிதரு மின்னமுத மன்னவளை வேட்டான்" பாக. (கo) உருக்குமிணி மணத்திற முரைத்த. டுஉ-எந.

உ. (அ) "வென் மரபின்" என்னும் சூத்திரவுரையில் இசசெய்யுளை மேற் கோள் காட்டி, இதனுள் வெளவிக் கொளலு மறனெனக் கண்டன்று

இதனால் இருவர்க்கும் புணர்ச்சிபுவகை பிறந்தது.

இது தலைவிரவின நெடுவெண்பாட்டும் ஐஞ்சீரடுக்கிய குறுவெண்பாட்டும் [illegible]ராசகமும் வெள்ளைச்சுரிதகமும் பெற்று வந்த கொச்சகக்கலி. (உசு)

(சூக) நோக்குங்கா னோக்கித் தொழூஉம் பிறர்காண்பார்
தூக்கிலி தூற்றும் பழியெனக் கைகவித்துப்
போக்குங்காற் போக்கு நினைந்திருக்கு மற்றுநாங்
காக்கு மிடமன் றினி;
எல்லா வெவன்செய்வாம்;
ரு பூக்குழாய் செல்லல வனுழைக் கூறாய்
விரும்பியான் விட்டேனும் போலவலென் முன்னேற்
கரும்பெழுது தொய்யிற்குச் செல்வவீய் காக
விருந்தாயோ வென்றாங் கிற;
கo அவனின், திருந்தடி மேல்வீழ்ந் திரக்குநோய் தீர்க்கு
மருந்துநீ யாகுத லான்;
கஉ இன்னும், கடம்பூண் டொருகானீ வந்தை யுடம்பட்டா
ளென்னாமை யென்னெய் தொடு;
கச இஃதோ வடங்கக்கேள்;
நின்னொடு சூழுங்கா லீயு நிலைநிலையா
வென்னொடு நிற்ற லெளிதன்றோ மற்றவன்
றன்னொடு நின்று விடு.

இது தலைமகற்குத் துறைநேர்ந்த தோழி அவனிலைமை தலைமகட்குக் கூறி அவளுரைத்த மாற்றத்தால் அவள் குறிப்பறிந்து இவ்வகையான தலைவற்குக் கூறெனை அவளுடன் நகையாடிக் கூட்டமுண்மை தான் அறிந்தமை தோற்றுவித்தது.

இதன் பொருள்.

எனவும் 'நீர்க்கினிதென் றுண்பவோ நீருணபவர்' எனவும் தலைமகன் கூறுதலானும் தலைமகள் முனிந்துரைத்தலானும் ஊடியுணர்வாள் போல அரிதாகத் தலைமகளுடன் பட்டமையானும் இஃது உயர்ந்தோர் மாட்டுவந்த கைக்கிளை என்பர்; இளம்; தோல். அகத். சூ. உக. (ஆ) அகப்புறக் கைக்கிளை தலைமைப்பாடில்லாதவர்க் குரித்தாய்வந்ததற்கு நாற்கவி. உரைகாரரும் (நாற்கவி. சூ. உசஉ.) (இ) மிக்க காமத்து மிடலுக்கு இ-வி. உரைகாரரும் (இ-வி. சூ.ருகக) மேற்கோள்காட்டுவர் (பிரதிபேதம்) *சரிதகமும் வந்த.

ரு அ௨ கலித்தொகை ௬௫.

(க)*நோக்குங்கா ணோக்கித் தொழூஉம் பிறர்†காண்பார்
தூக்கிலி தூற்றும் பழியெனக் (௨)கைகவித்துப்
போக்குங்காற் போக்கு நினைந்திருக்கு மற்றுநாங்
காக்கு மிடமன் றினி;
எல்லா வெவன் ‡செய்வாம்

எ-து: தான் தொழுகின்ற தன்மையைப் பிறர் காணபாராக மனத்தாற் றூக்குதல்இல்லாதவன் (௩)நாம்பார்க்குங்கால் நம்மைநோக்கிநதொழா நிற்கும்; இங்ஙனந் தொழுது நமக்குப் பழியைத்தூற்றுமென்று கருதித் தொழுதலை

விலக்கிப் போகவிடுங் காலத்து அப்போக்குத் தனக்குச் செய்யும் வருத்தத்தை நினைத்துப் போகாதிருக்கும்; ஆதலால் இனி நாம் அவனை நம்பால் வாராமற்

காக்கும (௪)காலமன் று, ||பின்னை எடீ! இவ்வனவகாத்தற்கு அரிதானநிலைமை கண்டு மேல் என்செய்யக்கடவேம கூறாய் ; ÷எ - று.

அதுகேட்ட தலைவி அதற்கு மறுமொழிகொடாது உடம்பட்டமை குறிப்பான் உணர்ந்தமையிற் பின்னுந் தோழி கூறுகின்றாள்.

௬ பூக்குழாய் செல்ல லவனுழைக் கூஉய்க்கூஉய்

விருப்பியான் விட்டேனும் போலவலென் (ரு)றேன்மேற்

க. "நோக்குமகா னேக்கித் .. .. .. .. . எவன் செய்வாம்" என்பது நாண மிக்கவழித்தோழியொடு உசாவியதற்கு மேற்கோள்; தொல். கள கு. உ௦. இளம்.

உ. (அ) "கைகவிகீதரல்"பொருந. கடுள-அ (ஆ)"தோழியைக் கைகவியா" கலி. சஉ: உக) (இ) "கைகவி நறுநெப்" சீவக. ௬௦௦.

௩. "குறவர் மகட்குச் சலாமிடத் கேக்கறு குமரனே" மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், காப்பு. ௬.

௪. இடமென்பது காலமென்னும் பொருளில் வருதலை இடையென்பது,* அப்பொருளில் பயின்று வருதலான் உய்த்துணர்க; புறம். ௯௪: உ; மணி. ௪: கூ௮; சீவக. ககஎகு. இல்வழி யென்பதற்கு இல்லாத காலத்தே யென்று பொருள் கூறி 'இடபொருள் காலத்தோடு மயங்கிற்று' (சிலப். ௪: கஙு.) என அடியார்க்கு நல்லாரெழுதி யிருத்தலும் இஙகே அறிதற்பாலது.

ரு. (அ) நற்றே ளிழைத்த கரும்புக்கு" (ஆ) "தெரிவேய்த்தோட் கரும் பெழுதி" (இ) "கடாஅக் கரும்பமன்ற தோளாளை" (ஈ) "அன்றுதா னீர்த்த கரும்பணி வாடவென், மென்றோ ணெகிழ்த்தான்றுறை" (உ) "செமென்றோட், பெய்கரும் பீர்க்கவும் வல்லன்"; கலி. கூ௪:கக,

(பிரதிபேதம்)*கோககினால், † காண்பான், | செய்யாகாம், ‖ பினை இல்வன ம் ÷ என்றுள் பூக்குழாய்.

## இரண்டாவதுகுறிஞ்சி உஎ. ௩அ௩

கருப்பெழுது தொய்யிற்குச் செல்வானீங் காக
*விருந்தாயோ வென்றாங் கிற;

௨௦ அவனின், திருந்(க)தடி பேல்விழ்ந் திரக்கு(உ)நோய் தீர்க்கு
மருந்துநீ யாகுக லான்

†எ-து: பூங்குழையினையுடையாய்! வருத்தத்தையுடைய அவனிடத்துநீ கூடுங்கூட்டத்தை யான் விரும்பி நின்னைப் பலகாலும் அழைத்தழைத்துக் கொண்டுபோய் விட்டேன்போலேயுமிருப்பேன். அவர்க்கு அது தோன்றாதபடி யான் அவனிடத்தே (ந)நீஎன் தோணோற்கரும்பாகஎழுதுங்குழம்பிற்கென்று செல்வன், நீ ஆண்டு வந்து இவ்விடமே நினக்கு இருப்பிடமாகக் கருதி இருந்தாயோவென்று என்னைத் தேடிவந்தாயாகக் கூறி அவ்விடத்தினின்று குறியிடமே போ, அப்பொழுது அவன் நோய்தீர்க்கும் மருந்து நீயாகையினாலே ‡நின்னுடைய நன்றாகிய அடிமேலேவீழ்ந்து நின்னை இரந்துகொள்ளும்; ||எ-று.

கஉ இன்றும், (ச)கடம்பூண் டொருகானீ வந்தை யுடம்பட்டா
ளென்னாமை மெய்(ரு)மெய் தொடு;

எ-து: அதுகேட்ட தலைவி நீ வாராய், இன்னமும் ஒருகால் அவனிடத்தே சென்று உன்குறைமுடிக்கலாந் தனக்கு கடனாக அவள் ஏறட்டுக் கொண்டு கூட்டத்திற்கு உடம்பட்டாளென்று அவர்க்குக் கூறாமைக்கு என் (சு)மெய்யைத்தொட்டுச் சூளுறவாயாகவென்றாள்; எ-று.

×வாவென்றது வந்தையெனத் திரிந்தது.

எசு: கரு, ககஉ சு. சங்க உக-நO. கசங நக-உ. (ஊ) "கரும்பும் வல்லியும பெருந்தோ ளெழுதி" சிலப். உ: உசு.

க "நீணடிலே ஞயி றய்யேன். சீறடி பாவவந்தே னருளெனத்தொழுது சேர்ந்தா, நாறிருங் குழலி னுளை... .. . புல்லி" சீவக. உOசுஉ.

உ. "மற்றிந்நோய் தீரு மருந்தருளா யொண்டொடீ" கலி. சுO: கஅ.

ந. (அ) "தூமணிக்கோழுந்து மென்றோட்டுயல்வர வெழுதினானோ" சீவக. உசசஉ. (ஆ) "தழைத்தோட் கேற்பக் கழையெழுதி ................ வனையுஞ் செறித்தனரால்" வாயு. பார்ப்பதி திருமண. கஎ.

ச. "புலத்தை" (குறள். கநOக.) என்பதற்கு, பரிமேலழகர் புலப்பாயாக வென்று பொருள் கூறி "புலத்தையென்புழி ஐகாரம் 'கடம்பூண்டொருகானீ வந்தை' என்புழிப்போல முன்னிலைவினைவிகுதி" என்று எழுதியிருத்தலும் இங்கே அறிதற்பாலது.

ரு. "மெய்தொடு" கலி. கரு. உச, "அடிதொட்டேன்" (கலி. கூச: நசு) என்பதன் குறிப்பும் பார்க்க.

(பிரதிபேதம்)* இருந்தாயோ, † எ-து: அதுகேட்டதலைவி அதற்குமறுமொழிகொடாது உடம்பாடுடைமைகுறிப்பான உணர்ந்தவிடத்து பின்னுந்தோழி பூங்குழை. ‡ நின்னுடையவடிமேலே|| என்றுரை இன்னும். ÷ தொடு இஃதோவடக்கக்கேள் எ-து, × வந்தை வாவென்றது திரிந்தது நின்னொடு. வந்தை வாராயென்றது திரிந்தது நின்றது நின்னொடு.



௧௪ இஃதோ வடங்கக்கேள்;
நின்னொடு சூழுங்கா லீயு நிலங்கிளையா
வென்னொடு நிற்ற லெளிதன்றோ மற்றவன்
றன்னொடு நின்று விடு

எ-து: அதுகேட்ட தோழி யான் கூறிய குற்றம் *இதுவோ? இனி இது செய்யும்படியைச் சுருங்கக்கேள், நின்னோடு யான் இதனை ஆராயுங்காலத்து நீயும் (க)நாணத்தால் நிலத்தைக்கீறி என்னுடனே வேறுபட்டுநின்றநிலை செய்தற்கு எளிதன்றோ? இந்நிலையைப் பின்னை அவன் தன்னுடனே நின்று பார்த்து நின்னுற்செய்தலரிதன்றோ? என்றாள்; எ-று.

இஃதோவென்றாள், "உடப்பட்டா ளென்றுமை யென்மெய் தொடு" என்றதனை. ஓகாரம், இது குற்றமன்றென மறையுணர்த்திற்று.

இதனால், தலைவிக்குப் புணர்ச்சியுவகை தோன்றிற்று.

†இஃது, எல்லா வெவன்செய்வாமெனவும்இஃதோ வடங்கக்கேளெனவும் வழியசைபுணர்த்த சொற்சீரடிகள் வந்து ஐஞ்சீரடுக்கிய வெண்பாக்களும்வந்த வெண்கலிப்பாட்டு. (உ௭)

(௬௪) அணிமுக மதியேய்ப்ப வம்மதியை நனியேய்க்கு
மணிமுக மாமழை நின் பின்னொப்பப் பின்னின்கண்
விரிநுண் ணூல் சுற்றிய வீதசூழ் முலை
யரவுக்கண் ணணியுறழ் பூசன்மீன் றகையொப்ப
வரும்படர் கண்டாரைச் செய்தாங் கியலும்
விரிந்தொலி கூந்தலாய் கண்டை யெமக்குப்
பெரும்பொன் படுகுவை பண்டி;

அ எள! எல்லா, மொழிவது கண்டை யிஃதொத்தன் றொய்யி
லெழுதி யிறுத்த பெரும்பொன் படிக
முழுவ துடையமோ யாம்;
உழுதாய்;

௧. (அ) "களவுடம் படுநரிற் கவிழ்ந்துநிலங் கிளையா, நாணி நின்றோள்" அகம். ௧௬: ௧௫-௬. (ஆ) "சரணப் பெருவிரலா லொல்கிநின்று நிலங் கீறி, மைத்த குழலாண் மற்றவன்முன் மலர்மேன் மடந்தை யென நின்றாள்" இராமா. வரையெடுத்த. ௯. (இ) "கெண்டை யுண்கணும் புறவடி நோக்கமண் கிளைத்துமின் னெனநின்றாள்" திருவிளை. திரு மணப். ௭௩.

(பிரதிபேதம்) * இதுவே இனி † இது நல்லாயென் செய்வாபென வழிபனசப்படைர்த்த சொற்சேரடியும் வர்து,

## இரண்டாவது குறிஞ்சி உஅ. ௩. அடி

௧௨ சுரும்பிமிர் பூங்கோதை யந்நல்லா யானின்
திருந்திழை மென்றோ ளிழுக்கத்தாற் றிஃதோ
கரும்பெல்லா நின்னுழ வன்றோ வொருங்கே
துகளறு வாண்முக மொப்ப மலர்ந்த
குவளையு நின்னுழ வன்றோ விகலி
முகைமாறு கொண்முறு வெயிற்றுப் பவையல்ல
வென்னுழுவாய் நீபற் றினி;
௧௯ மல்லா, நற்றோ ளிழைத்த கரும்புகரு நீட்டு
முற்றெழி லீல மலரென வுற்று
விருப்பிர் வழிபன்ன வுள்கட்டு ரெல்லாம்
பெரும்பொன் னுண்டென்பா யினி;
௨௩ நல்லா யிஃதுணர்மோ கேளாய்;
ஈங்கே தலைப்படுவ னுண்டான் றலைப்பெயின்
வேந்துகொண் டன்ன பல;

எ-து: நினது அழகினையுடைய முகம் மதியையொப்ப, மணிகள்விளங்கும் நின்பின்னின் மயிர் அம்முகத்துக்கொப்பாகியமதியை மிகவும்பொருந்தும கருமையையுடைய மழையையொப்ப, அப்பின்னின் மயிர்க்கண்ணே கிடந்து அலர்ந்த நுண்ணிய நூலாற் கட்டின தேனுல் ஈரமான இதழையுடைய பூக்கள் (க)பின்னுக்கொப்பாகிய கரும்பாம்பிடத்தே கிடந்து அதன் கரியநிறத்தோடே மாறுபடுகின்ற கார்த்திகையென்னும் மீனினது அழகையொப்ப, மனத்தான் ஒப்புக்கண்டவர்களை அவ்விடத்தே அரிய வருத்தத்தைச்செய்து போகின்ற பரந்து தழைத்த கூந்தலையுடையாய்! நீ என்னை எள்ளும் நிலைமையைக் கை விட்டு யான் கூறுகின்றதனை மனத்தான் ஆராய்ந்து†பார்; நீ பண்டு எம் பொருட்டுப் பெரிய ‡பொன்னுண்டாவை; எ-று.

இது முன் நீ இடைவிடாமற்(உ)கூடிய கூட்டத்தால், தோற்றப்பொலிவு எய்தினையெனக் கூறி, ஈண்டு நிகழ்ந்த அருமைசெய்தயர்த்தலுற் பிறந்த வருத்தத்தை நீக்கிற்றும்; அஃது எமக்கு நீபெரிய பொன்கடவையென்பதோர் நகைப்பொருளுந் தோன்ற நின்றது.

அலரி பூவென்னுமாத்திரையாய் நின்றது. ஒப்பவென்னுஞ் செயவெனெச்ச உவமவுருபுகள் கண்டாரென்னுந்தொழிற் பெயரித் தொழிலொடு ||முடிந்தன.

அ ஏஎ! எல்லா, மொழிவது கண்டை (ங)யிஃதொத்தன் றொட்டி
லெழுதி யிறுத்த பெரும்பொன் படுக
முழுவ துடையமோ Xயாம்

---

க. (அ) "கோளுண்ட திங்கள் முகத்தாள்" கம்ப. பூக்கொய். கசு. (ஆ) "பின்னும் வேணிவார் குழலெனுங் கரியபே ராவம்" பிரபுலிங்க. மாயைபூசை. எ.

உ. "தேசு மொளியுந் திகழ நோக்கி" (பரி. கஉ: உக.) என்புழி 'தேசு - செயற்கை யழகு, ஒளி - கலவியால்வந்த நிறம்' என்று எழுதியிருக்கும் உரையும் இந்நூற்பக்கம் உகஉ: க-ஆங்குறிப்பில் இவ்விடத்திற்குப் பொருந்துவனவும் ஒப்புநோக்குக.

ங. (அ) இஃதொத்தன் கலி. சுO: கூ, சுக; க, சுஉ: க, அச: கஅ. அஅ கO, கOங: ஙக, சஙஅ: கO. (ஆ) இஃதொத்தன் என்பதை இடைச்சொல்

(பிரதிபேதம்) [1] கூந்தல்கண்டை † பாரதுவீ ‡ பொன்னுண்டாயை என்முன் மூன்றது முனவிர் இடைவிடாமல் || முடிநதன என இகழ்ச்சிக்குறிப்பு எல்லா, × யாம்உழுதாய் எ - து: இவன்,



எ-து: இவனொருத்தன் தன்னுற் றேற்றப்பொலிவு எய்திலேமெனக் கூறுகின்ற கூற்றைப் பாராயென செஞ்சொடு * கூறி, நீ என் றேண்மேற் றொய்யிலெழுதிக் கனவுபோல ஒரொருகாற் றங்கின நிலையாலுண்டான † தோற்றப்பொலிவு உண்டாவேம்; அதுவன்றிஎம் (க) முலையால்நின்மார்பிடத்து இடைவிடாது உழுத நல் ‡ வினையை உடையேமோ? அஃதின்றே; எ-று.

என, இகழ்ச்சிக்குறிப்பு.

|| இது தொய்யிலெழுதி முடித்ததனுலுண்டான பொன்கடவேம்; அதுவன்றி நின்கீழ் உழுத நிலைமையையுடையேமோவென ஒரு நகைக் குறிப்புத் ÷ தோன்றநின்றது.

௧௧ உழுதாய்;

சுரும்பிமிர் பூங்கோதை யந்நல்லா யானின்
(உ) திருந்திழை மென்றோ ளிழைத்தமற் றிஃதோ
கரும்பெல்லா நின்னுழ வன்றோ வொருங்கே
துகளறு வாண்முக மொப்ப மலர்ந்த
குவளையு நின்னுழ வன்றோ விகலி
முகைமாறு கொள்ளு மெயிற்று யிவையல்ல
வென்னுழுவாய் நீமற் றினி

எ-து: சுரும்புகள் ஒலிக்கின்ற பூவாற்செய்த கோதையினையுடைய அழகினையுடைய நல்லாய்! நீ × உழுதாய்; பின்னை இக்களவொழுக்கத்திலும் இந்தத்

ஈறுதிரிந்த தென்று கல்லாடரும் (தோல். இடைச. சூ. ௩.) (இ) இஃதொத்தன் என்பது இவனொருத்தனென 'இஃதென்ற அஃறிணைப்பொருளை உணர்த்திய சுட்டு உயர்திணைப்பொருளை யுணர்த்தி நின்றதென்று நச்சினார்க்கினியரும் (தொல்.கிளவி.சூ.௩௭) இவ்வாறே வேறுரைகாரரும். (தொல். கிளவி. சூ. ௩௮.) கூறுவர். (ஈ) இந்நூற் பக்கம் ௩௭௯: உ. (ஆ) குறிப்பும் பார்க்க.

க. (அ) "பஞ்சி மேன்மிதிக் கிற்பணிக் குந்தகை, யஞ்சி லோதிய ரம்முலை நாஞ்சிலா, மஞ்சு தோய்வரை மார்ப மடுத்துழத், துஞ்ச லோவுந் தொழிலின னாயினன்" சூளா. சீயவதை. ௩௧. (ஆ) "முலையாலுழப் பட்டும்" சீவக. ௩௩௮௪.

உ. "திருந்திழை மென்றோள்" கலி. ௩௩௪: உ.

(பிரதிபேதம்) * கூறினன். அங்ஙனம் கூறி னீன். † தோற்றம்பொலிவு. ‡ விளையையாம் இடையேமோ அது எமக்குஇன்றே என்றான்இது || இதனால் ÷ தோன்றி நின்றது சுரும்பிவர்பூங் × உழுதாயென்றதனுள்கருத்திடைவிடாது............... ...காணென்றான் என்றதனற்பயன்...............உழுதாயென்றும்கைக்குறிப்பும்தோன்றிநின்றது மற்று. வினைமாற்று பின்னை.



திருந்தின் இழையையுடைய மென்றோளிலே யான் எழுதின கரும்பின் றோற்றப் பொலிவெல்லாம் நின் முலைகள் இடைவிடாமற் புணர்ந்ததனாலுண்டான பயனலவோ? அதனோடேகூடப் பழகுகின்ற ஒளியினையுடைய முகமானது குவளையோடு இகலிப் புணர்ச்சிதோறும் பொலிவு பெறும்படி பூத்த கண்களின் றோற்றப்பொலிவு நீ இடைவிடாமற் புணர்ந்ததனாலுள்ள பயனல்லவோ?(கு)முல்லைமுகையோடு மாறுபாடுகொள்ளும்எயிற்றினை † யுடையாய்! இத் தோற்றப்பொலிவுக ளன்றி வேறே தோற்றப்பொலிவுண்டாக நீ புணர்வை ‡யென்றான்; எ-று.

னைறதனால், நின்கருத்து இடைவிடாது முயங்குதலேயாயின் இனி நீ இடைவிடாமல் முயங்கினைகாணென்றான். அதன் பயன் இனி வரைவே

னென்றதாம். || இது நீ என்கீழ் உழுதாயென நகைக்குறிப்புத்தோன்ற நின்றது. மற்று, வினைமாற்று. குவளையென்றது, கண்ணை.

இதனால் அருமைசெய்தயர்த்ததுமில்லையென்றான். இதனால் நீ கரும்புங் குவளையுமன்றி வேறு என்னுழுவாயென ஒரு நகைக்குறிப்புத்—தோன்றிற்று.

கக. எல்லா, நற்றோ ளிழைத்த கரும்புக்கு நீகூறு
முற்றெழி லீல மலரென வுற்ற
(உ)இரும்பீர் வடியன்ன வுண்கட்கு மெல்லாம்
பெரும்பொன் னுண் டென்பா ரினி

எ-து: அதகேட்ட தலைவி எடா! என் அவயவங்களில் தோற்றப்பொலிவு உண்டாகக் கூறாமல் என்தோள்களில் நீ எழுதப்பட்ட கரும்பிற்குக் தோற்றப் பொலிவுளதென்று நீ கூறு: அதற்கு இசைந்தேன்; இனி அலர்ந்த செவ்வி குலைந்து முதிர்ந்த அழகையுடைய நீலமலரென்று பிறர் கூறும்படியாக

க. (அ) "கறமுல்லை நேர்முகை யொப்ப நிரைத்த, செறிமுறை" (ஆ) "முல்லை முகையு முருந்து நிரைத்தன்ன, பல்லும்"

உ. (அ)"இரும்பீர் வடியொத்து மைவிளங்குங் கண்ணொரி" பரி எ: இஅ. (ஆ) "எஃகு குற், றிருவே றாகிய தெரிக்கு வனப்பின், மாவி னறுவடி போலக்காண்டோறு, மேவ றணடாமகிழ்நோக்குணகண" அகம். உக

இ- அ (இ)-"மாவடு வகிரன்ன கண்ணள்" திருவாசக. அடைக்கலப். அ. (ஈ) "வடுப்பிளவனைய கண்ணாள்" சீவக. கஙஎ௲. (உ) "சூதவடுப், பகுத்தே பதித்த தெனவெள்ளை வாழ்வித்த பாதககண" அம்பிகா. கஉஉ. (ஊ) "வடுவகிரனைய வுண்கண்" (எ) "வடுவகிர் வெரீஇங்கண்" (ஏ) "வடுவகிர் நெடுங்கணார்" நைடத. நளன்றூது. கஙங, சுயம்வரப். கசுஅ, புனல்.ச. என்பவையும் (ஐ)"இளமாங்காய் போழ்ந்தன்ன கண்" கலி. கஂஅ: உஅ. என்பதும் அதன் குறிப்பும் ஒப்புநோக்கற்பாலன.

(பிரதிபேதம்* தோளிலேஎழுதின † உடையாய நீ இனித்தோற்றப் ‡ எனமுங்குவளை || இதனுல் ÷ தோன்றநின்றது.

அஃனே "நறுவடி மாவின் பைந்துணரு ழக்கி" (கலி ௪௧. ௧௪.) என்பதனானும் அதன் குறிப்பாலும். (ஆ) "கொக்கினறுவடி விதிர்த்த" பெரும்பாண். ௩0௯) (இ) "நறுவடிமாவின்" (மலை. ௫௧௨) என்பவற்றாலும் உணர்க வடுவகிரென்னும் பொருளில் வடுவென்பதும் வரும்.

௩. (அ) "பூப்போ லுண்கண் பொன்போர்த் தனவே" (ஆ) "மேனி பொன்போற் செய்யு மூர்கிழவோனே" ஐங். ௧௯, ௪௧. என்பனவைகளும் (இ) "வயங்கு பொன்னீன்ற" (சீவக ௧௫௩0) என்புழி, 'பொன் - பசப்பு' என்று எழுதியிருக்கும் விளக்கமும் இங்கே அறிதற்பாலன.

பிரதிபேதங்கள்: * வருந்தமுற்ற உண்கட்கு † எனமுனிதழைல ‡ கூறியது பொன்னிறத்தை யொப்புப போக்கியகாலமெல்லாம் || இனியோளே,



என்றது கூட்டத்தாற் செயற்கைநலம்பெற்ற நின்னை வரைந்துகொ ணின்றுற் பெறும் பயனெல்லாங் கொள்வேனென்றதாம். இனி அரசனுடை பொருளை நுகர்ந்தவன் எதிர்ப்படில் அவ்வரசன் அவனிடத்து வருத்தமுறுத்தி கொண்டாற்போன்ற பலபயன்களையும் யானும் இங்கே கொள்வேனென ஒரு நகைக்குறிப்புத்தோன்றி*நின்றது.

௨௬ ஆங்காக

எ-து: அதுகேட்ட தலைவி நீ அருமைசெய்தயர்த்ததனைப் பொய்யாக்கி அன்பின்றி நின்றதன்மை நீங்கி எம்மிடத்து அன்புடையையான காலத்து நீ கூறியவாறே ஆவதாகவென உடம்பட்டுக்கூறினள்; எ-று.

அந்திற மல்லாக்கால் (க)வேங்கைவீ
முற்றெழில் கொண்ட சுணங்கணி பூணாகம்
பொய்த்தொருகா லெம்மை முயங்கினை சென்றீமோ
(உ)முத்தேர் முறுவலாய் நீபடும் பொன்னெல்லா
முத்தி யெறிந்து †விடற்கு.

க. (அ) "துஞ்சி, நளிசுசினை வேங்கை நாண்மலர் நசைஇக், களிச்சுரும்பரற்றுஞ் சுணங்கிற் சுணங்கு பிதிர்ந்து,.......... ..பூணகத் தொடுங்கிய வெம்முலை" சிறுபாண். உஉ - உசு; (ஆ) "வேங்கை வென்ற சுணங்கின்" ஐங். ஙஉச; (இ) "வேங்கை, பூழுறு நறுவீ கடுப்பக் கேழ்கொள, வாகந் தரும்பிய மாசறு சுணங்கின்" (ஈ) "பொன்வீ, வேங்கைப் புது மலர்புரைய, நன்னிறத்தெழுந்த சுணங்கணி வனமுலை" அகம். கஎச; கO - கஉ, ஙகக: அ-கூ; (உ) "நாகிள வேங்கையிற், கதிர்த்தொளி திகழு நுண்பல்சுணங்கின், மாக்கண்மலர்ந்த முலையள்" புறம். ஙருஉ. கஉ-கச; (ஊ) "குறமனைவேங்கைச் சுணங்கொ டணங்கலர் கூட்டுபவோ" கோவையார். கஙச. (எ) "வாரிரு புடையும் வீக்கி வடஞ்சுமந்தெழுந்து வேங்கை, யேரிருஞ் சுணங்கு சிந்தி யெழுகின்ற விளமென் கொங்கை"

(ஏ) "நறவேங்கை யவிர்சுணங்கின் மடவார்" சூளா. சீய. கஅஅ, கல்யாண. உOஅ; (ஐ) "முலைத்தலைச் செஞ்சுணங்கு வேங்கை மலரோ, டலைத்தன வம்பொற்பிதிர்" யா - வி. சூ. அச. மேற்கோள். (ஒ) "அணங்கரவல்கு லரிவையராரத் தனமருப்புச், சுணங்கலர் வேங்கைத் துணர்மலை நாட" அம்பிகா. ஙஙகூ.

உ. (அ) "முத்தேர் முறவலாய்" என்பது அன்னவை பிறவுமென்பதனாற் கொள்ளப்படும்உவமையுணர்த்துஞ்சொற்களுள் ஏர்வந்ததென்பதற்கும் (தொல். உவமை. சூ. கக. இளம்) (ஆ) உருவுபற்றிய பண்புவமத்தின்கண் ஏர் வந்ததென்பதற்கும் (இ - வி. சூ. கூசஉ.) மேற்கோள்.

(பிரதிபேதம்) * நின்றது அதுகேட்டதிலை நீ அருமை..............உடம்பட்டுக்கூறினுல் ஆங்காக. †விடற்கு ஏ-து. அதுகேட்டதிலன்.

இரண்டாவது குறிஞ்சி உக. ஙக்கூ

எ-து: அதுகேட்ட தலைவன் நீ இப்பனம் வெறுந்தாக்கூறிய கூறுபாடு ஒழிந்தகாலத்து, முத்தையொக்கும் முறுவலையுடையாய்! நீ முன்பு உற்ற பசப்பெல்லாம் இனி ஒருகாலமும் உறுதபடி ஒழித்துவிடுதற்கு வேங்கைப்பூவினது முற்றின அழகைக்கொண்ட சுணங்கணிந்த பூணினையுடைய ஆகத்தாலே பொய்த்தாகிலும் ஒருகால் முயங்கினையாய்ச் செல்வாயென்றான்; ஏ-று.

பொன்னெல்லாம் உத்தியெறிந்துவிடவென்றதனால் வரைவேனென்றான்; இதனால் நீ கடவ பொன்னெல்லாம் பெற்றேனென்று கழித்துவிடுவேனென ஒரு நகைக்குறிப்புத் தோன்றிநின்றது.

இதனால். இருவர்க்கும் புணர்ச்சியுவகை தோன்றிற்று.

இது தரவும் ஐஞ்சீரடுக்கித் தளைவிரவின குறுவெண்பாட்டும் தனிச்சொல்லும் நெடுவெண்பாட்டும் ஐஞ்சீரடுக்கிய நெடுவெண்பாட்டும் * வழியசைபுணர்த்த சொற்சீரடியும் குறுவெண்பாட்டும் வெள்ளைச் சுரிதகமும் பெற்று வந்த கலிவெண்பாட்டு. இதனுள் நிரையீற்றியற்சீர்ப்பின்னர் நிரைமுதல் வெண்சீரும் நேர்முதல்வெண்சீரும் வருதலின் அணிமுக மதியேய்ப்ப வம்மதியைநனியேய்க்கு(?)மென்பதுகட்டளையன்றாயிற்று. "நிரைமுதல் வெண்சீர் வந்து நிரை†தட்பினும், வரைநிலை யின்றே யவ்வடிக் கென்ப"(க) என்பதனால் உணர்க. (உஅ)

(சுரு.) திருந்திழாய் கேளாய்நம் (உ)மூர்க்கெல்லாஞ் சாலும்
பெருநகை யல்க னிகழ்ந்த தொருநிலையே
(ரூ)மன்பதை யெல்லா மடிந்த விருங்கங்கு
லந்துகிற் போர்வை யணிபெறத் தைஇநம்

---

(இ) "முத்தேர் முறுவலாய்" கலி. கரு: கஉ, கஎ: க. (ஈ) "முத்தேர் முறுவலார்" இனியது. உ.

க. †தொல். செய். ரு. கூ○. இதனுரையிலும் "நிரையீற்றியற்சீர்ப் பின்னர் நிரைமுதல் வெண்சீரும் நேர்முதல்வெண்சீரும் முதல்வந்து பின்னர் வெண்சீரடுக்கிய வெண்டளை வரினும் சிறிது துள்ளலோசை பிறத்தலின் அதனைச் சீர்வகையடியென்றுணர்க" என்றுகூறி அதற்கு 'அணிமுக ..... ........பின்னின்கண்' என்பதை மேற்கோள் காட்டியிருக்கிறார் இவ்வுரையாசிரியர்.

உ. "உலகத், துள்ளோர்க் கெல்லாம் பெருநகை யாகக், காமங் கைம்மிக வுறுதர" அகம். உ௫அ: க௨-௪.

௩. "துஞ்சூர் யாமத்தும்" ஐங்குறு. க௩. (ஆ) "துஞ்சூர் யாமத்து" அகம். ௩௬௦: க௨. (இ) "மன்னுயி ரெல்லாந் துயிற்றி யளித்திரா, வென்னல்ல தில்லை துணை" குறள். ககரு௮. (ஈ) "ஊர்மடி கங்குல்" சிலப். க௯: (பிரதிபேதம்) *வழியசைப் புணர்த்த †தட்டல்வரை,



(க)மின்சாயன் மார்பன் குறிநின்றேன் யானாகத்
தீரத் தறைந்த தலையுந்தன் கம்பலுங்
காரக் குறைந்து கறைப்பட்டு வந்துநஞ்
சேரியிற் போகா முடமுதிர் பார்ப்பானைத்
தோழிநீ போற்றுதி யென்றி யவனாங்கே
பாராக் குறழாப் பணியாப் பொழுதன்றி
யாரிவண் *ணின்றீ ரெனக்கூறிப் பையென
வைகாண் முதுபகட்டிற் பக்கத்திற் போகாது
தையால் தம்பலந் தின்றியோ வென்றுதன்
(உ)†பக்கழித்துக் கொண்டீ யெனத்தரலும் யாதொன்றும்
(௩)வாய்வாளே னிற்பக் கடிதகன்று கைமாறிக்
கைப்படுக்கப் பட்டாய் சிறுமிநீ மற்றியா
னேனைப் பிசாசருள் என்னை நலிதரி
னிவ்வூர்ப் பலிநீ பெறாஅமற் கொள்வே
னெனப் பலவுந் தாங்காது வாய்பாடி நிற்ப
முதுபார்ப்பா னஞ்சின னாக வறிந்தியா னெஞ்சா
தொருகை மணற்கொண்டு மேற்றூவக் கண்டே
கடிதரற்றிப் பூச லொடங்கின னாங்கே

உ0ங. (ஊ) "பழவிறல் மூதூர் பாயல்கொண்டுறான்" (ஊ) "ஊரா துஞ் சியாமத் தொருகனி யெழுந்து" மணி. எ கூங, உ0 கூச. (எ) "பல்லுயிர் மடிந்த நள்ளென் யாமத்து" (ஏ) "யாமரை கங்குல" பெரு ங் (உ) கூ சஉ, (ங) உங. ருகூ.

க. (அ) "சாயலின் மார்பன்" (ஆ) "சாயலின் மார்பு" கலி. சா ங0 கச ங அ. (இ) சாயலென்பதற்கு ஐம்பொறியானுகரும் மென்மையென்று பொருள் கூறி அம்மென்மை யுற்றற்கு வந்ததமைக்கு 'சாயன் மார்பு' என்பதை மேற்கோள்காட்டி யிருத்தல் கண்டறிதற் பாலது. தொல். உரி. சூ. உஎ. நச். சிவஞா. அ உரை.

உ. "அவரை யருந்த மந்தி பகர்வர், பக்கிற் றோன்று நாடன்" (ஐங்குறு. உஎக.) என்பதற்கு, 'அவரையை நிறையத்தின்ற மந்தி பண்டவாணிகரைப்போலத் தோன்று நாடன்' என்றெழுதியிருக்கு முறையால் 'பக்கு' என்பது பையென்று துணியலாகும்.

ங. "வாய்வாளாது" கலி, ருகூ: உக "வாய்வாளா நின்றாள்" பரி. உ0:சக.
(பிரதிபேதம்) *நின்றயெனக், † மைக்கழித்து.

## இரண்டாவது குறிஞ்சி உகூ. ருகூரு

யொடுங்கா வயத்திற் கொடுங்கேழ்க் கடுங்க
(ண்)ணிரும்புலி கொண்மார் நிறுத்த வலையுளோ
ருறு ரேதில் குறுநரி பட்டற்றாற் காதலன்
காட்சி யழுங்க நம்மூர்க் கெலாஅ
மாகுலமாகி விளைந்ததை யென்றாந்தன்
வாழ்க்கை *பதுவாகக் கொண்ட முதுபார்ப்பான்
†வீழ்க்கைப பெருங்கருங் கூந்து

இஃது இரவுக்குறி அலாமேன்றஞ்சித் தலைவனை ‡ நீக்கி நிறுத்தக் கருதிய தோழி "அல்லகுறிப் படுதலு மவளவயி னுரித்தே, யவன்குறி மயங்கிய வமைவொடு வரினே" என்னும் (உ) சூத்திரத்தான் அல்லகுறிப்படுதல் தனக்கும் உரித்தாகலின், அவன்செய்த || குறியறிதற்குப் புறத்துச் சென்ற

வழி, ஆண்டுப் பிறந்ததோர் செய்தியாக ஒரு பொய்யமை(ங)நாடகவழக்கும் உலகியல்வழக்குமாகப்புனைந்துரைவகையாற்படைத்துக்கொண்டு,மற்றை ஞான்று தலைவன் சிறைப்புறமாகத் தலைவிக்குக் கூறியது. இதனை, "இரந்து குறை யுற்ற கிழவனைத் தோழி, நிரம்ப நீக்கி, நிறுத்த லன்றியும், வாய்மை கூறலும் பொய்தலைப் பெய்தலு, நல்வகை யுடைய —நலத்திற் கூறியும், × பல்வகை யானும் படைக்கவும் பெறுமே"(ச)=எனப்பொருளியற்சூத்திரத்துப் பொய்தலைப் பெய்தலையும் படைக்கவும்பெறுமென வழுவமைத்த வாற்றுற் கொளக.

க. (அ) "கூனுடை வெஞ்சிலைக் குன்ற வாணர்தா, மானொடுடன் புலிபட வளைஇத வாய்வலை" சேது. கந்தமாதன. சுO. என்பதும (ஆ) "மலர்க், கருங்கணணணி கயகையின் மெனமாவி யன்னங் கருதிவைத்த, பெருங்கணணி யிறபுனற 'காக்கைபட்ட டாங்குப் பிரமநதின், மருங்கணணி வநதன ரென்பது கேட்டின்னு மாயக்திலயே" வெங்கைக் கோவை. உஉக. என்பதும் இவ்வேக அறிதற்பாலன.

உ. தொல். கள. சூ. சஉ.

ங. நாடக வழக்கென்பது உள்ளோனுவது இல்லோனுவது தலைவனுக்கச சிலசெய்திகளைப் புனைந்துரைத்தல். இச்செய்திகளில் யாணடும் எஞ்ஞான்றும் இல்லன கூறாது உலகத்தோர்க்கு நன்மை பயத்தற்கு நல்லோர்க்குள்ளனவற்றை ஒழிந்தோர் அறிந்தொழுகுதல் அறமெனக் கருதி சிறிது இல்லனவுங் கூறப்படுமென்ப.

ச. தொல். பொருளி. சூ. சங. இதனுரையில் இச்செய்யுளை வரைந்து கோடற்குப் பொய்யுரை படைத்தற்கு இவரும், கலிவெண்பாட்டு (பிரதிபேதம்) *வாட்கை, †வீட்கை. ‡நீக்கிநிறுத்த, || குறிப்பறிதற்குப் ÷ புறத்தில். × பல வகையாகவும், = என வழுவமைத்த

## இதன் பொருள்.

திருந்தின இழையினையுடையாய்! தன்னுடைய மயிர் நீங்குதலாற் றட்டையான தலையினையும் படாத்தினையு முடையனாய்க் கருங்குட்டத்தாலே காலுங் கையுங் குறைந்து கடமைத்துறைப்பட்டு வந்து நந் தெருவினின்றும் போகாமல் ஒளித்துத்திரியும் மூடமாகிய முதிர்ந்த பார்ப்பானைத் தோழி நீ பேணுவாயாகவென்று பலகாலுங் கூறுவை; அதனைப் பேணாதே (க)உயிர்ப்பன்மைகளெல்லாஞ் சேரத்துயில்கொண்டகங்குலிலே அழகிய துகிலாற் போர்த்த போர்வையை வாங்கி அழகுபெற உடுத்து நம்முடைய மென்மையினிய மார்பையுடையவன் செய்யுங் * குறியை உற்றுநின்றேனாக அப்பார்ப்பானாலே இராக்காலத்தே பெரிய நகைநிகழ்ந்தது; அந்நகை ஊர்க்கெல்லாங் கொண்டாடுதற்கு அமைந்திருக்கும்; அது நிகழ்ந்த படியைக் கேளாய்; அவன் அவ்விடத்தே குனிந்துபார்த்து மகளிர் நிற்குங் காலம் அன்றாக இவ்விடத்து நின்ற † நீர் யாரென்று முற்படக்கூறி, சிறியவளே! நீ என்னாலே அகப்படுத்திக்கொள்ளப்பட்டாயென்று கூறிப் பையெனப் பணிந்து வைக்கோலைக் கண்ட முதிய எருதுபோலே என்பக்கத்தினின்றும் போகாதே நின்று தையால்! தம்பலந் தின்பாயென்று தன் பாக்கிடும்பையைக் குலைத்து நீ எடுத்துக்கொள்ளென்று தந்த அளவிலே யான் அங்கு ஒருவார்த்தையும் வாய்திறந்து சொல்லேனாய் நிற்கையினாலே, தான் அஞ்சி முன்புகொண்டுநின்ற ஒழுக்கத்தைக் கைவிட்டுக் கடிதாக நீங்கிப் பின்னை யான் பெண்பாற்பசாசாகிய நின்னையொழிந்த ஆண்பாற் பசாசு; எனக்கு அருள்; அங்ஙனம் அருளாது என்னை வருத்துதலைச் செய்வையாயின் இவ்வூரில் நீ பெறும்(உ)பலியை நீ பெறாமல் யான் எடுத்துக்கொள்வே னென்று பல வார்த்தைகளையும் பேணாமல் வாயாற் சொல்லிநிற்க, முதியபார்ப்பான் என்னைப் பெண்பசாசென்று கருதி அஞ்சினானதலை யான் அறிந்து ஒருகையாலே மணலை அள்ளிக்கொண்டு ஒழியாது அவன்மேலே தூவக்கண்டு அவ்விடத்தேநின்று கடிதாகக் கதறி ஊர்க்கெல்லாங் கேட்பக் கூப்பிடத் தொடங்கினான்; எந்நாளுந் தன் தொழில் அவ்வாறு தனிநிற்கும் மகளிரைக்கண்டால், தன் காம வேட்கையாலே மேல்விழுதலாகக்கொண்ட முதியபார்ப்பானுடைய விரும்பு

---

இருபத்தொன்பதடியான்வந்ததற்குப் பேராசிரியரும் இவரும் (தொல்.

சைய. (சூ. ககூ௦.) மேற்கோள்காட்டியுள்ளார்.

க. மன்பதை - உயிர்ப்பன்மை; புறம். எக: கஎ, உக௦: க. இது மக்கட் பன்மை குறித்தும்வரும். இச்சொல் மன்பது என்றும் அருகிவழங்கும்.

உ. (அ) "பலிகொண்டு பெயரும் பாசம் போல" பதிற். எக ஆ. (ஆ) "ஈற்றிளம் பெண்டி ராற்றாப் பாலகர், கடுஞ்சூன் மகளிர் நெடும்பு ணுற்றோர், தந்துயர் கெடுக்கு மந்திர மாக்கள், மன்றப் பேய்மகள் வந்து கைக் கொள்கென, நின்றெறி பலியி னெடுங்குர லோதையும்" மணி. எ: அக-அ௫.

(பிரதிபேதம்) * குறியை ஐயுறா, † ரியாமென்றா.

## இரண்டாவது குறிஞ்சி உகூ. ரு.கூரு

நிலையுடைய பெரிய தண்ணிய நாடகம் நங் காதலர் நம்மைக் குறியிடத்து வந்து காணுங் காட்சி கெடும்படியாக நமக்கு வருத்தமாய் விளைந்தது; இது விளைந்தபடி ஒன்றற்கும் கெடாத வலியினையும் விளைந்த வலியினையும் ... கண்மையினையுமுடைய புலியாலுள்ள பயனைக் கொள்ளுதற்கு நிறுத்தின வலையிலே அதன் ஏற்றிற்கு வேறாகியதோர குமரி அகப்பட்ட தன்மைத் தாயிற்று; ஆதலால் இனி இரவிற் குறிநிகழ்ச்சியின்றுபோலுமென்றாள்; எ-று.

வீழ்க்கை வாழ்க்கைபோல் நின்றது. காரக்துறைந்து அக்குமரியை. †குறழாப் பாராவென்க.

வைகாண முதுபகடெனவே காம இன்பம் நுகாதலாற்றாமை காட்டி நின்றது. ஏனப்பிசாசெனவே அவள் பெண்பாற்பசாசும் தான் ஆண்பாற் பசாசுமென்பது உணர்த்திற்று. அருளெனப் பிரிக்க. ஆங்கே || கடிநரற்றி நம மூர்க்கெலாம் பூசலெழுகின்னென மாறுக.(ரு)தம்பலம், தாம்பூலமென்பதன் மொழித்திரிவு. தின்றியோ, ஒகாரம் அசை.

இதனால், தலைவற்கு அசைவு பிறந்தது.

இஃது ஒருபொருளுக்லாது அடியிகந்து தளைவிரவி வந்த கலிவெண் பாட்டு. (உக)

— குறிஞ்சிக்கலி முற்றும்

க. தாம்பூல மென்பது (அ) "ஒருவர் வாயுமிழப்பட்ட தம்பல மொருவர் வாய்க்கொண்டு" சீவக. உஅ௯க. என இவ்வாறே திரிந்து வருதலு மன்றி, (ஆ)"வெள்ளிலைத் தம்பல்கண்டார்"(இ)"வெள்ளிடைத் தம்பற் குப்பை" (கம்ப. வரைக்காட்சி. சக, கார்கால. உஅ) என ஈறுகுறைந் தும் வரும்.

(பிரதிபேதம்) *விளைந்தபடி புலிகொணமார விறுத்தயலயிற்குறாரி பட்டசனமை, தாம்றறு; ஆதலால இனிஇரவிறகுறிகிகச்சி இன்று போறுபெனரன் ஒனறறதும், † கன மைத்தாலெனக. வீழக்கை, ‡ குழருபபாா, ‖ யடிாத ாறிரம். ÷ குறிஞ்சிர்கு நாசினுக்கினியான்செயத வுரைமுடிாதது னறுக.